First Thousand.

Vol. XV.] **JANUARY-APRIL 1907.** REGISTERED.—M. 108 [No 9-12.

லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணு.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவிலை விவரம்.
ஒருவருஷத்துக்கு ரு. 4
6 மாதத்துக்கு ,, 2-2




**DEVOTED TO TRUTH AND KNOWLEDGE:**

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா ரென்னுடையரேனுமிலர்.—திருக்குறள்.

**A HIGH THOUGHT REVIEW**
**TAMIL MONTHLY**
*Estd. May 1892.*

கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்கவதற்குத்தக.—திருக்குறள்.

**ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCTION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS. ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.**

**Hitch your wagon to a star—Emerson.**

**CONTENTS** PAGE.

1. "The Pied Piper of Haven't Got" By the Editor. 250
2. In Praise of the Grace Divine, Sri Lakshianandum ... ... 252
3. "Free from Bonds"—The Autobiography of a Taluq Gumastah ... ... ... 257
4. Further Reduction of the Salt Tax. ... 262
5. Ayodia—By T. C. Venkataramana Iyer ... 264
6. Sita—A Tale of Hindu Domestic Life, By S. Ramaswami Aiyer B. A. ... 269
7. Hamlet, the Transcendentalist (From Shakespeare) By Sri Rajanayaki ... 272
8. Notice to Subscribers ... ... ... 276
9. Sir George Arbuthnot in Jail.

**அடக்கம்.** பக்கம்,

1. அற்புத நாட்டான் கற்பிதக் கூத்து. 250
2. திருவருட் கதம்பம் (திருவையாறு, லக்ஷ்யானந்தம்.) ... ... 252
3. அவிழ்த்து விட்டகழுதை. (ஒரு தாலுகா குமாஸ்தாவின் சரித்திரம்.) ... 257
4. உப்புவரியின்னும் குறைக்கப்பட்டது. 262
5. அயோத்தி. (டி. வி. வெங்கடாரமணய்யர்.) 264
6. சீதா அல்லது இல்லற வாழ்க்கை. எஸ். இராமஸ்வாமி ஐயர். பி. ஏ., ... 269
7. ஹேமசந்திரலிங் என்னும் ஆத்மவிசாரி, (ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு) ஸ்ரீராஜநாயகி 272
8. சந்தாதாரர்களுக்கு நோட்டீஸ். 286
9. ஸர். ஜார்ஜ் அர்பத்நட் ஜெயிலிலிருக்கிறார்.

**"Our Theism is the Purification of the Human Mind"—Emerson.**

**Thick Paper Edition for Patrons.]** PUBLISHED BY **[Minimum Subscription, Rs. 5.**

**The Secretary, Diffusion of Knowledge Agency,** 2, Sydogy Lane, PYCROFT'S ROAD.

*Anandashrama, Triplicane, Madras.*

**For Satyananda of the Ananda Mission.**

**Thin Paper Editon or the People.]** *Copy-right.* **[Subscription Price: Yearly Rs. 4.**

*"Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Upanishad.*

# Re The Arbuthnot Insolvency.

236

The following letters have been placed at our disposal. We publish them without comment as the reply shows "the wolf in sheep's clothing."

Copy of letter to Sir George Arbuthnot, dated 5th November 1906.

Dear Sir, I received this morning an acknowledgment by your Firm, now in liquidation, of my personal letter to you, dated the 28th ultimo. I know well that you will be doing your utmost to assist the Official Assignee in the interests of creditors and that the Insoluency Act requires this of you. But the object of my writing to you was not to get this formal information which however I accept with thanks and have further sent it to the press that the public my derive what consolation it could from it.

I appealed to you as one man of conscience appealing to another man of conscience As one who has spent the best part of one's life in diffusing western knowledge among the mass of my countrymen and has helped them in a way to move out of their old groove by example and precept, I felt conscience-smitten at the sudden ruin that has overtaken so many poor souls and families. I wanted to know whether I was mistaken in my judgment of your name and character which I took to be a representative type of English name and character itself, and in which as I wrote to you I still believed. In February last I heard a lot of rumours against the stability of the Firm and in March I plainly expressed my apprehensions to your English Assistant in charge of the Fixed Deposit department, on whose assurance I renewed the largest sum in the name of my little son and subsequently other sums in the name of my little daughter and on other accounts. It was then by my mistaken confidence in the integrity of your name and character, more than that of your Firm, that I believed the report of your Assistant regarding the stability of your Firm. But the reports that are now abroad, some of them from apparently authentic sources, tend to show that there has been blameable mismanagement and suppression of truth for some years. I hesitate to give them all in detail out of personal considerations; but I would like to know from you how much of truth there is in these apparently authentic reports which people readily believe and grow wild over. As one who has risked his all in complete trust of your individual name and character, I feel I have a right to appeal to you personally to break your silence and save me from this dreadful suspense, which tells upon me more than the dead pecuniary loss which has plunged two innocent lives in utter ruin and destitution.

I beg to send you enclosed for your perusal a printed notice containing a personal statement of mine. I await your reply in expectant anticipation, for on that will depend all my future activities as a publicist and journalist which I have now followed for full 22 years.

Hoping to be favoured with a reply to this letter.

Yours &c.,

(Signed). C. V. SWAMINATHAIYAR.

Sir George Arbuthnot's reply, dated 6th November 1906.

SIR,—I have received your letter of the 5th instant with its enclosure for which I thank you. I am afraid that I cannot do more than assure you that I am doing my utmost to protect the interests of the creditors whose losses it is my one object to reduce as much as possible. I have written to the papers explaining my views. It is impossible for me to enter into questions with regard to the past management of the Firm with individual creditors, but that you should suffer loss I deeply deplore.

Yours faithfully,

(Signed.) GEORGE, G. ARBUTHNOT.

M. R. Ry. C. V. SWAMINATHAIYAR.

(True copy.)

## THE ARBUTHNOT INSOLVENCY CASES.

In the course of a letter on the Arbuthnot Insolvency cases, civil and criminal, Mr. C. V. Swaminathier, Secretary, Vigilance Committee, writes :—

The ceaseless watch and vigil I had to keep in watching this Insolvency affair closely, has revealed to my mind one thing above all others, and that is: our Anglo-Indian brethren have studied us well and know how to hypnotise us taking advantage of our own weakness, more than their strength. The impression made on my sensitive mind which was daily gaining strength from the incidents that came under my observation and was steadily growing into a deep conviction has found "strenuous" expression in an inimitable and highly inspired passage in Mr. Pal's address which I quote here without comment. Said Mr. Pal with thrilling eloquence: "The overlordship of foreign influence was nothing but hypnotism, it was the *maya* surrounding us." The way to dispel this darkness surrounding us is as Mr Pal said, and must ever be, by strenuous strivings after attainment of spiritual strength which is all inclusive and not exclusive as many wrongly think. "Seek first the Kingdom of God and all other things will be added unto it"—*The Hindu of May 2nd* 1907.

உ

*"Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

"Seek Truth wherever you can find it,' But, "Make your choice and stick to it till you reach the End."

ஸத்யம்வத.—**Speak the Truth.**

"Hitch our Wagon to a Star. "To Thine Own Self be True.




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ [God is Love : Knowledge is Power: *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் 15.] 1907-ம் ௵ ஜனவரி-ஏப்ரில் ௴. [சஞ்சிகை 9-12.

# "The Pied Piper of Haven't-Got."

## "அற்புத நாட்டான் கற்பிதக் கூத்து"

முன்னொரு காலத்தில் ஹாமலின் என்றொரு பட்டணமுண்டு. அந்தப் பட்டணத்திலுள்ள நகரவாசிகள் எலிகளின் உபத்திரவத்தால் மிகவும் வருந்தினார்கள். மேட்டெலி, நாட்டெலி, கறப்பெலி, வெளுப்பெலி, சுண்டெலி, குண்டெலி, வண்டெலி, வளையெலி யென்று இப்படி விதம் விதமான எலிகள் சொல்லி முடியாத வண்ணம் தோன்றி அவர்கள் பண்டம் பாத்திரங்களையும், சாமான் சரக்குகளையும், துணி மணிகளையும், வீடு வாசல்களையும் நாசம் செய்து துவம்சம் செய்தன. நகரத்தார் ஆனமட்டும் தங்களாலான பரிகாரங்களைச் செய்து பார்த்தும் பிரயோசனப்படாமல், இந்த எலிகளின் ஹிம்சைகளைப் பொறுத்துப் பார்த்தார்கள். பொறுத்துப் பொறுத்துப் பார்த்தும் பொறுப்பது சாத்தியமில்லாமற்போக எல்லாரும் ஒருங்கு கூடி அந்த ஊர் நகரவிசாரணைச் சங்கத்தாரிடம்போய் முறையிட்டுக் கொள்ளத் துணிந்தார்கள். நகரவிசாரணைச்சங்கத்தலைவர் உடனே ஊர் விசாரணைக் கர்த்தர்களைக் கூப்பிட்டுக் கவுன்ஸில் கூடி நகரத்தார் ஒன்றுகூடி ஒரே மனதாய்ச் செய்துகொள்ளும் இந்த முறைக்கு வழிதேடி நிவிர்த்தி செய்யவேண்டியது நம் கடமையென்றும், அப்படியொன்றும் வழிதேடி நிவிர்த்தி செய்யாவிட்டால் மோசம் வருமென்றும், ஜனங்கள்

ஊரை விட்டு ஓடிப் போவார்கள், பட்டணம் பாழாகப் போய்விடும்! அப்புறம் பாழான ஊருக்கு நரி ராஜா வென்பதாக அவர்கள் தாங்கள்மட்டு மிருந்துகொண்டு பாழ்த்த ஊரை வைத்துக் கொண்டு வாழ்த்த மனுஷாளின்றி வாழ வேண்டுமென்று வெகுவாக வற்புறுத்திப் பேசினர். விசாரணைக்கர்த்தர்களெல்லாம் எலியுபத்திரவம் ஏதோ பொறுக்கக் கூடவில்லை யென்பது வாஸ்தவம் தான்! அதற்கு விமோசன மென்ன வென்று தான் தோன்றவில்லை யென்றார்கள். மற்றொருவர் எழுந்திருந்து எலிகளை பென்ன தான் புரை வைத்துப் பிடிக்கப் பார்த்தும் வெகு நாளாக உண்டு உருசி கண்ட எலிகளாதலால், நகர விசாரணைச் சங்கத்தார் செய்யும் சூழ்ச்சியினும் எலியின் சூழ்ச்சி மேலானதாயிருப்பதல் எலியைப் பிடிக்கப்போடும் பக்ஷண பணிபாரங்களினுலுண்டாகும் செலவு மிச்சமேயன்றி எலிகள் பிடிபடுவதைக் காணோமென்றார். மற்றொரு விசாரணைக்கர்த்தர் எழுந்து இவ்வூரிலுள்ளவர்கள் எவர்களாலும் இந்த எலிகளைப் பிடிக்க முடியாது; அந்நிய தேசத்திலிருந்து மந்திரவாதியை வரவழைத்து மந்திரத்தால் இவ்வெலிகளின் உபத்திரவத்தைப் போக்கினல் போக்கலாமேயன்றி தந்திரத்தினல் ஒன்றும் ஆவதாயில்லையென்று சொன்னர். இவர் சொன்னதைக் கேட்டு எல்லாரும் தந்திரத்தால் பலிக்காதது மந்திரத்தால் பலிக்கலாமென்று சொல்லி சந்தோஷப்பட்டு அவர் சொன்னதே சரி சரி யென்று கரதாளம் போட்டுத் தலையாட்டினர்கள். எல்லாரும் சரியென்று ஒப்புக் கொள்ளவே நகர விசாரணைத்தலைவர் அந்த ஆலோசனையைச் சரி யென்று ஒப்புக்கொண்டு அதை நிறைவேற்ற அந்நிய தேசத்து மந்திரவாதியை நம்நாட்டுக்குள் வரவழைக்க வேண்டியிருப்பதால் நகரத்தார் ஆலோசனையின்றி இது செய்யத்தக்கதல்லவென்று சொல்லி அந்நிய தேசத்திலிருந்து மந்திரவாதியை வரவழைக்கும் பொறுப்பை நகரத்தார் தலையில் போட்டுவிட்டார். 'நகரத்தார் மந்திரவாதியை வரவழைக்கத் தங்களாலாகாதென்று நகரவிசாரணைத்தலைவரைக் கேட்டுக்கொண்டார்கள். விசாரணைத்தலைவர் வம்புசெய்ய, ஜனங்கள் துன்பு பொறுக்காமல் முறையிட்டார்கள். அவர்கள் முறையிட்டுக் கஞ்சி அந்நிய நாட்டு மந்திரவாதியை யழைக்கத் தீர்மானித்தார்கள். அவர் கோடி பணம் கேட்டார். நகரவிசாரணைத் தலைவர் மயங்கிப்போனர். ஜனங்கள் கூக்குரலிடுவதைக்கண்டு அவரைச்சும்மா அனுப்பிவிட பயந்து அப்படியே சரியென்று ஒப்புக்கொண்டார். ஒப்பந்தபடி மந்திரவாதி எலிகளையெல்லாம் மந்திரம் போட்டு வெளியிலழைத்து மகுடிவதுபோல் தன் வாத்தியத்தை முழக்க, எல்லா எலிகளும் அம்மந்திரவாதியைத் தொடர்ந்துபோய் சமுத்திரத்தில் விழுந்து அக்கரை போவோமென்று நீந்திப்போயின. நடுச் சமுத்திரத்தில் கொண்டுபோய் எலிகளையெல்லாம் விட்டுவிட்டு மந்திரவாதி ஒப்பந்தப்படி கோடிதனம் கொண்டுவாருங்கள் என்றார். நகரவிசாரணைத்தலைவர் பொக்கிஷத்தைத் திறந்து பார்க்க அதிலுள்ள பணம் பத்துக்கு ஒன்று கூடப்போதாததாக விருந்தது. விசாரணைத்தலைவர் பேந்தப் பேந்த விழித்தார். ஜனங்கள் எலியின் உபத்திரவம் தீர்ந்ததென்று வெகுகாலமாக உறக்கமற்றுழன்றவர்களாதலால் கும்பகர்ண நித்திரையில் விழுந்துபோய்விட்டார்கள். மந்திரவாதி கோடிதனம் தருகிறீர்களா என் மந்திரசக்தியைக் காட்டட்டுமா என்றார். தனமுமில்லை கனமுமில்லை இனமாய் ஆகக்கூடியதைப் பாரும் என்றார். சரியென்று மந்திரவாதி நகரமாளிகையைவிட்டுத் வெளியில் போய்விட்டார். ஊரெல்லாம் நித்திரையிலாழ்ந்திருந்தமையால் தெருவெல்லாம் பாழ்த்திருந்தது. மந்திரவாதி மகுடிவதை நிறுத்திப் புல்லாங்குழலெடுத்து வாசித்தார். ஊரிலுள்ள

கன்றுகாலிகளெல்லாம் ஸ்ரீகிருஷ்ணபகவானது குழலின் கானம் கேட்டு அதில் ஈடுபட்டு நின்றது போல் பிரமித்து நின்றன. பின்னுமொரு சுரமெடுத்தூதினார். ஊரிலுள்ள கால்நடை பசுக்களெல்லாம் அவரைத்தேடிக்கொண்டு வந்தன. எலிகளைவிட்டுக்கொண்டு போனதுபோல இவைகளையும் கானசக்தியால் கானகத்தேகொண்டு விட்டுவந்தார். திரும்பிவந்து கோடிதனம் இனியேனும் கொடுக்கஉதவுமாவென்று கேட்டார், விசாரணைத்தலைவர் கையைப்பிசைந்தார். †மந்திரவாதி மாயமாய் மறைந்துவிட்டார். பின்னும் சற்றுநேரத்திற்கெல்லாம் திடீரென்று காரிருள் வந்து மூடிக்கொண்டதுபோல் எல்லாருக்கும்ஒரு மயக்கம் உண்டாயிற்று. உண்டானதும் அதிலிருந்து ஒரு கானம் கிளம்பியது. அந்த கானத்தை உற்றுக்கேட்கவும் ஜனங்கள் தூங்கினவர் தூங்கினபடி விழித்துக்கொண்டார்கள். விழித்துக்கொண்டவர்கள் துயில் நீங்காமற்றானே கானம் கேட்டதைக் கேட்டபடி நினைத்துக்கொண்டு அதுவழிப்பட்டவராய் தற்போதமிழந்த தாம் போவதும்இருப்பதும் தெரியாமல் அம்மாயவாதியின் கானத்திலீடுபட்டு அது இழுத்த இடமெல்லாம் சென்றார்கள். சென்றவர்கள் நாடு நகரெல்லாம்விட்டு சேரி சமுத்திரமெல்லாம்கடந்து வனத்தினில் நுழைந்து இனத்தினை மறந்து கணத்தினில் மறைந்தார்கள். நகரமெல்லாம் பாழாய்விட்டது. பாழ்நாட்டுக்கு நரி ராஜாவென்றபடி நகரவிசாரணைத் தலைவர்கள் மட்டும் அப்பாழ் நகரிலிருந்து பேய் பூதங்கள்வந்து ஒலமி— அவ்விரைச்சலுக்கு பயந்து ஓடுமிடமும் தெரியாமல் ஒளிக்குமிடமும் காணாமல் திக்பிரமைகொண்டு தியங்கினார்கள்.—என்று ஒரு கதையுண்டு.

இந்தக்கதையை ஒரு ஆங்கிலேய மஹாகவி கற்பிதமாயுண்டுபண்ணி காவியமாகச் செய்ததுண்டு. கற்பிதகாவியங்களெல்லாம் மனோதத்துவங்களை யுணர்த்துமாறு செய்யப்படும் உண்மையுரைகளேயன்றி வேறல்ல. இந்தக் கற்பிதக்கதையில் நடந்தபடி அற்புத நாட்டான் கற்பிதக் கூத்தொன்று இப்பொழுது அரங்கேற்றி ஆடப்பட்டு வருகிறது. ஜனவரி பிப்ரவரி மார்ச்சு மாசமுழுவதும் நாம் ஊண் உறக்கமின்றி இந்தக் கூத்துப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டபடியால் அந்தந்த மாசத்துச் சஞ்சிகைகள் போடுவதையும் மறந்துவிட்டோம். ஆனாலும் கூத்துப்பார்த்த வேடிக்கையைச் சிறிதும் மறக்கவில்லையாதலால் அந்த வேடிக்கையை உளவறிந்து பார்க்கக்கொடுத்துவைக்காதவர்கள் கேட்டுக்களிக்கும்படி அற்புதக் கூத்தாக அமைத்தெழுதத் தீர்மானித்துள்ளோம். இந்தக்கூத்து ஆரம்பித்து நடக்கும் காலம் இன்றைக்கு முன் 150-வருஷம், பின் 150-வருஷம். இந்த முந்நூறு வருஷத்துக் கூத்தையும் காற்று அலைந்தலைந்து ஒய்ந்து—ஆர்ப்பாடம் செய்து ஊர்ப்பாடம் சொல்லிக் கடைசியில் கானகத்தே வசிக்கும் தபசிகள் உள்ளத்திற் புகுந்து ஒய்வொழிவின்றி உலக விஷயங்களையெல்லாம் ஒன்று விடாது தத்துவோபதேசமாக இடைவிடாமல் மௌனப் பிரசங்கம் செய்து வருவதுபோல், நாமும் அதிகப்பிரசங்கம் செய்வதைவிட்டு, காலதேசவர்த்தமானங்களை யொட்டிக், கதை கதையாக கதாப்பிரசங்கம் செய்யக்கருதி யுள்ளோம். இந்த ஏப்ரல் மாசத்து சஞ்சிகையோடு நாம் பழைய கடையைக் கட்டிவிட்டு இனி புதுக்கடை திறக்கப் போகிறோம். அதற்கு முதல் கை-முதலே யன்றி வேறொன்றில்லை. பாங்கியோ ஜனங்கள் வாங்கிப்படிப்பது தான். இதில் நாம் ஏங்கிப்போகாமல் உளம் தாங்கிநிற்க ஒருமாத காலம் பிக்ஷாடன மூர்த்தியாக ஊர்சுற்றி உயிர்ப்பிச்சை வாங்கிவரப்போகிறோம். திரும்பி வரும் வரையில் இதை வாசிப்போர் காலதாமதமாவதைப் பொறுத்தருளக் கோறுகிறோம்

† கல்கி அவதாரத்தில் இப்படிப்பட்ட மந்திரவாதியைக் காணலாமென்பர் நமது புராணிகர்.

ஜகஜ்ஜநநீஸத்குரோ.

# திருவருட் கதம்பம்

(திருவையாறு, லக்ஷயானந்தம்.)

"எரியலா லுருவமில்லை ஏறலாலேறலில்லை
கரியலாற்போர்வையில்லை காண்டகுசோதியார்க்குப்
பிரிவிலாத்தேவர் கூடிப் பெருந்தகைப்பிரானென்றேத்தும்
அரியலால்தேவியில்லை ஐயனையாறனுக்கே."

—அப்பர் தேவாரம்.

கோச்சகக் கலிப்பா.

1. மித்தையறச் சத்திபத்தை மேதினியிற் றனுரைக்க
நித்தியத்தின் னேர்மைகண்டு நிர்மலரை நின்னடியாம்
சத்தசத்தி னிடையிருத்தி யற்புதமா யருள்செயவே
பத்தருளஞ் சத்தியமாய்ப் பதித்திடுவை பேரன்பே.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

2. உடலெவனாலேயோரு முயிரெவனாலேயாடும்
படர்பவமெவனாற்றீரும் ப்ரக்ஞைநின்றெவனை நாடும்
திடவறிவெவனாலாகுந் தெய்வநூலெவனையோதும்
கடவுளென்றெவனைப்பேணு மவன்கழற்கடிமையானேம்.

3. நன்றொடுதீதிலதாய் நடுமுடியடியிலதாய்
அன்றுடனின்றிலதா யதுவிதுவெனவொணாதாய்த்
தொன்றுதொட்டெங்கட்காகத் தோன்றியவுருவமொன்றே
என்றும்நாம்பரம்பரையா யிறைஞ்சிடுந்தெய்வமாமே.

4. விரும்பிடுமன்பர்க்கென்றே மெய்தனைத்தோன்றச்செய்திட்
டிரும்பினும்வலியநெஞ்ச னென்னையுமிளகச்செய்து
கரும்பினுமினியமௌனக் கருத்தினிலுறையச்செய்த
திரும்பியுப்பாடென்றால்யான் செய்வதிங்கொன்றுமில்லை.

5. அகமற்றுமௌனானந்த மடைகுதியென்றுசாற்றி
அகமற்றநிலையைக்காட்டி யந்தவோர்நிலையிற்கூட்டி
அகமற்றசிவமேயாக்கி யப்புறம்பாடென்றால்யான்
அகமற்றிங்காடுந்தன்மை யையநின்னருளுக்கன்றே.

## நூல்.

1. ஒன்றாகவிருந்ததென்று மோர்மாயைதோன்றிற்றென்றும்
அன்றேயம்மாயைதன்னா லகிலமுண்டாயிற்றென்றுங்
குன்றாவவ்வொன்றைமாயை கூடாமற்றடுக்குமென்றும்
நன்றானசாத்திரங்கள் நவில்கின்றமுறையிதாமே.

2. அவித்தையிற்றோன்றிநின்ற அகிலத்திற்சீவரெல்லாம்
அவித்தையால்முன்செய்கர்ம வாஸனாபலத்தினாற்
பவித்ததின்வழியிற்சென்று பரமமெய்யுணர்விழந்தவ்
வவித்தையின்வசத்தராகி பாழ்ந்திட்டார்பவத்தினுள்ளே.

3. பவமெனுங்கடலில்வீழ்ந்து பிறப்பெனுஞ்சுழலிலாழ்ந்து
சிவமெனுங்கரையிற்சேராத் திகைக்கின்றஜீவர்க்கெல்லாம்
தவமெனும்மரக்கலத்தின் தலைவனாங்கருணைமூர்த்தி
நவமெனுமுருவாய்த்தோன்றி ஞானத்தாற்கரையிற்சேர்ப்பான்.

4. தந்நிலையிதுவென்றோரார் தாம்நின்றநிலையுங்காணார்
இந்நிலைநிற்கின்றோமென் றெண்ணவுஞ்சிறிதும்வாரார்
எந்நிலைவேண்டுமோவவ் வெண்ணமுமில்லார்தங்கண்
முன்னிலைதன்னிற்றோன்றி முன்னிலையளிக்குந்தீரன்.

5. சேய்பிணிதீரவேண்டித் தீஞ்சுவையாறும்நீக்கித்
தாய்மருந்தருந்தல்போலத் தயாநிதிக்கடவுள்நீயும்
ஒய்விலாப்பவத்திலாழ்ந்திட் டுயர்நிலைகாணாவெங்கள்
தேய்விலாப்பிறவிபோக்கச் செகந்தனிலெழுந்தையன்றோ.

6. என்பெலாமுருகவாடி யிருகணீர்சொரியத்தேடி
அன்பெலாமொன்றாய்க்கூடி யவனின்றநிலையைநாடித்
துன்புறுமிகம்விட்டோடித் தொழுதடிபோற்றுந்தொண்டர்
அன்பினிற்சிக்கியார்க்கு மகப்படானகப்பட்டானே.

7. அடியவரன்புகூடி யானந்தமூர்த்தியுன்னைப்
படியினிலுருவாய்த்தோன்றிப் பழம்பொருளுரைக்கச்செய்திட்
டடியவர்தானேயாகி யன்னவருயிரையுண்டவ்
வடியவர்மனதிற்சிக்கி யகலாதுசெய்ததன்றே.

8. நம்பிடிற்கைவிடாத நாதனுக்காளாகாமல்
வம்புசெய்புலன்களாலே வருந்தியநாட்போதாதா
துன்புறுபவத்தைவிட்டுச் சுகாதீதமாகவேண்டில்
என்பிராற்கடிமையாக விசைந்திடலடையலாகும்.

9. புலன்களின்வழியிற்றோய்ந்து புண்படுகுழியில்வீழ்ந்து
நலமென்பதறவேகாய்ந்து நடக்குற்றுமாயைக்காளாய்ப்

பலன்வழியறியமாட்டாப் பரிதவித்ததும்போதாதா
நலந்தரும்நாதற்காளாய் நயந்திடில்நலமிதன்றோ.

10. கல்லாதகல்வியெல்லாங் கற்றுமேகசடராகி
இல்லாதவெல்லாங்காட்டி யின்பத்தினிடமுங்காட்டாப்
பொல்லாதமாயைக்காளாய்ப் பொருந்தியநாட்போதாதா
சொல்லாதமௌனிக்காளாய்த் தோய்ந்திடில்நலமிதன்றோ.

11. சொல்லியசொற்கள்சொன்ன சொற்பொருள்காட்டுமல்லாற்
சொல்லுதற்கரியவந்தச் சுகத்தினைகாட்டுமோதான்
சொல்லினுக்கெட்டாநாதன் சொற்படிநடந்துகொண்டாற்
சொல்லெலாங்கடந்தவொன்றைச் சுலபமாயடையலாமே.

12. நாமாகவிந்நாண்மட்டும் நடந்தடையாதபேற்றைத்
தாமாகவலியவந்து தயவுடனடிமைகொண்ட
கோமானென்குருந்தன்பாற் குறுகியேயடிமையானால்
ஏமாந்துதேவர்நாண வின்புடனடையலாமே.

13. பொன்னுடன்தட்டானன்றிப் பொற்பணியாகாவாறு
மண்ணுடன்குயவனன்றி மட்கலமாகாவாறு
நின்னருள்வடிவமன்றி நினதுயர்மொழியுமன்றி
நண்ணவோர்தலம்வேறுண்டோ ஞானமாம்பணியைக்காண.

14. அருவுருவின்றிநின்ற ஆனந்தநாட்டானிங்குத்
திருவுருக்கொண்டுதோன்றித் தெரிசனமளித்துப்பின்னுங்
கருவுருவாராவண்ணங் கருணையாற்கடைக்கணிட்டுப்
பெருவுருவானவின்பப் பேற்றினையளிக்கப்பெற்றோம்.

15. செல்விசிற்சத்திதன்னைச் செங்கோலென்றருட்கைகொண்டு
பல்விதவுயிர்களெல்லாம் படைத்தளித்தழித்தாட்கொண்டு
நல்விதவழிநடாத்தி நமக்கெனவுருவாய்வந்தான்
சொல்விதங்கேளாதார்கள் துயர்க்கடல்கடப்பதெங்கே.

16. எப்படியான்சொன்னாலு மப்படியதுவேயானாய்
இப்படிகருணைபூண்ட வீசநின்னருள்வாக்கன்றி
யெப்படியுலகமாயை யேகுமோவேகாதென்றே
தப்பெடுத்தடிக்காநின்றேன் சத்தியமிதுவேயாகும்.

17. யான்செயுஞ்செய்கையெல்லாம் நின்னருட்செயலேயன்றோ
யானென்பதினியுமுண்டோ வென்னுடையென்பதாமோ
யானென்பதனைத்தும்விழ்த்தி யானெனநீயேதோன்றி
ஊனொடுமுயிரையுண்டா யுனையன்றியான்வேறாமோ.

18. உனையலாலொன்றுமுண்டோ வுனக்கெனவுருவமுண்டோ
தனையெலாம்நின்பாலீந்து தன்னருள்பெற்றார்மேனி
தனையெலாமுனதாய்க்கொண்டு சகத்தினிலுலவிநின்றாய்
இணையிலாவருட்குநேரா யேதுமேகைம்மாறில்லை.

19. இதமிலாப்பிறப்பிலிட்ட விதுவதுவென்றேபேசும்
மதங்களாமாசுநீக்கி மாநிலையார்க்குமியாப்
பதமதையடியார்க்கீந்து பக்குவமறிந்தேயாள
நதமெனவந்தாயன்றோ நாதநின்னருள்வியப்பே.

20. தனக்கெனவழிகள்தோன்றிச் சாரமாட்டாவெங்கட்குத்
தனக்கேதும்வேண்டாநாதன் தயவினாலுருவங்கொண்டு
மனக்கேதமனைத்தும்நீக்கி மௌனமாநிதியையெல்லாம்
உனக்கேயென்றளித்ததன்மை யுரைக்கொணாவியப்பாமந்தோ.

21. உருகிடுஞ்சிந்தையின்க ணுட்புகுந்தருளினாலே
வருகின்றதுகள்களெல்லா மாற்றிநின்மௌனபோதந்
தருகின்றவின்பஞானந் தயவுடனருளிச்செய்த
பெருகிடுங்கருணைதன்னைப் பேசிடில்வியப்பேயன்றோ.

22. இருந்திருந்தென்னையுநீ யியல்புடனேற்றுக்கொண்டாய்
பொருந்துமோவினையிலாநின் பூரணவருளுக்கிங்ஙன்
மருந்துக்கென்றலைந்திட்டாலு மகப்படக்குணமிலாத
பெருந்துயராளனேற்கும் பொருந்தியததிசயங்காண்.

23. உன்னுடனென்னையுமொன்றா யொற்றுமையாகச்செய்த
தண்ணருடனையுங்கூடத் தானினையாதவண்ணம்
பண்ணிவைத்திட்டவுன்றன் பண்பினையெண்ணிநெஞ்சம்
தன்னுருவினையிழந்து ஸஹஜமாய்நின்றதென்னே.

24. என்னதுபிறவியென்றே யிருந்ததோரெண்ணம்வீழ்த்தித்
தன்னதுவெனவகித்துத் தண்ணருளமுதமூட்டிப்
பின்னதுபிறந்துவாராப் பேறரும்பதவிதந்த
முன்னவனுன்னையன்றி முற்றுமோமூவர்கட்கும்.

25. அருளையேமேனிகொண்டிட் டருளையேயாவிபூண்டவ்
வருளையேயன்பர்க்கிய வருள்விழிதிறந்துநோக்கி
யருளினாலசைந்துலாவி யருண்மொழியளித்தவுன்ற
னருளினைநினைக்குந்தோறு மருண்மயமாகுமன்றே.

26. என்னதானேதிட்டாலு மெழுத்தையன்றிவேறு
தன்னைத்தானறிந்ததுண்டோ தன்செயலிழந்ததுண்டோ
பின்னைத்தான்பிறவாத்தன்மை பெற்றுளங்களித்ததுண்டோ
தன்னைத்தானுக்கும்நாதன் தாளிணைத்தடங்கொள்வோமே.

27. ஆற்றுநீர்வெள்ளம்போல வடுத்தடுத்தோடுகின்ற
மாற்றிடாப்பிறப்பிறப்பாம் மாதுயரடைந்தவர்க்குத்
தோற்றிடவெதிரிற்சென்று சொந்தமாயாண்டுதுன்பம்
ஆற்றிடச்செய்தவற்கே யடிமையாம்குடிகளன்றே.

28. கதிரவனொளியதன்றிக் கண்ணொளிகாணுமோதான்
அதிபதிகுருவையன்றி யறிவினன் மட்டுமந்தக்
கதிதருமௌனபோத கைவல்யமடையலாமோ
துதிபெறுமருட்கழற்கே தொண்டரென்றடைவோம்வாரீர்.

29. இசைந்துளவன்பர்காள்நீ ரிந்தவோர்புதுமைகேளீர்
அசைந்திலாப்பொருடானிங்கே யசைந்துருவோடெழுந்திட்
டசைந்திலாப்பதவிகாட்டி யப்பதமடியார்க்கிந்தே
யசைந்திடாததுவொன்றாகி யானந்தமாக்கக்கண்டேன்.

30. மாதர்பொன்பூமியென்னும் மயக்கமாங்கடலில்வீழ்ந்து
பேதமாம்வலையிற்பட்டுப் பிறப்பெனுஞ்சுழலிலாழ்ந்து
போதமாங்கரையைக்காணப் புழுங்கிடுமாந்தர்கட்குப்
*போதமாயருகிற்சேர்ந்து ப்ரீக்ஷைடாற்கரையிற்சேர்ப்பான்.

31. ஆரியனருளைவேண்டி யலைந்திடவேண்டுமோதான்
ஆரியமூர்த்தியுங்க ளகம்புறமெங்குமாவான்
தேரியமன்றிலன்பு தளும்பிநின்றுருவமாகி
ஆரியனாகத்தோன்றி யருளளித்தகமேசார்வான்.

32. சாதனநான்குங்கண்டு தன்வழிதவறாநின்று
நீதறத்தவமுயன்று திருவடிக்கடிமையாக
ஆகலேயன்றிவேறே யகத்தினிற்பற்றொன்றின்றி
ஆதரவோடமைந்த வன்பர்கட்கருளாநிற்பான்.

33. அன்றுநம்முன்னோரான வருந்தவமுனிவரெல்லாந்
தொன்றுதொட்டடைந்தவாழ்வைத் துயருறுதெளிதிலேயே
யின்றுநாமடைதற்காக வெம்பிரான்வடிவுகொண்டு
கன்றதைப்பேணுமாப்போற் கருணையாலளித்திட்டானே.

34. முத்திமாபுரியிலேக வெத்தவுமியற்றினரோ
நத்திநாமடையச்சென்றால் நமக்கது முற்றுறுதோ
வெத்தன்மையுளதோவென்றே யேங்கிடுமன்பர்கட்குச்
சத்தியமுனதேயென்று தன்முடிசூட்டினனே.

35. புவியின்மீதெத்தனைதான் புண்ணியமியற்றினேமோ
அவிர்கின்றபெரியவாழ்வே யாசானென்றுருவந்தாங்கிப்
பவித்தெங்களவித்தையெல்லாம் பறந்திடமுத்தியென்னுந்
தவிசினிலேற்றிவாழத் தந்திட்டான்ஞானச்செங்கோல்.

* போதம்-தெப்பம்.

(இன்னும் வரும்.)

ஓம் ஸ்ரீமௌநராஜ குருப்யோநம:

# * அவிழ்த்து விட்டகழுதை.

"யாரடா அங்கே, அதோ அந்த தரித்திரம் பிடித்த மேசை நாற்காலிகளையெல்லாம் தூக்கி உடைப்பில் கொண்டுபோய் எறி" –('எலியா' என்னப்பட்ட 'சார்ல்ஸ் லாம்ப்'.)

முன்னுரை.

இந்தச் சரித்திரத்தைப் படிக்க ஆரம்பிக்கும் நண்பனே, அடியிலிருக்கும் கையெழுத்தைப் பார்த்துவிட்டுப் புஸ்தகத்தை மூடிவிடாதே. ஆம், நான் ஒரு எளிய தாலூக்காகுமாஸ்தா தான். சில நோயாளிகளைப்போல் இறகு பேனாவின் வழியாய் என் ஜீவனாதாரமான ஆகாரத்தை அருந்துவது என் பிழைப்பு. அதிலும் பழைய நாளைய தாலூக்கா குமாஸ்தா. மெட்ரிகுலேஷன் பரீக்ஷைகூடத்தேறாதவன். இந்நாளில் பி. ஏ., எம். ஏ. பரீக்ஷை கொடுத்தவர்களெல்லாம் தாலூக்கா குமாஸ்தாக்களாயிருக்கிறார்கள். ஆனால் எம். ஏ. பட்டம் பெற்றவர்களுடைய கிரந்தத்தைத்தான் படிக்கிறது என்று நீ பிடிவாதமாயிருந்தால், என்னுடைய அரிய அனுபவங்களையெல்லாம் நீ அறியாமல் நஷ்டமடைவாய்.

"அடே அப்பா, என்னடா இவன் ரொம்ப பயமுறுத்துகிறான்!" என்று சிரிக்காதே. அதென்ன, தாலூக்கா குமாஸ்தாவென்றால் அவ்வளவு அலக்ஷியம்? அவனுக்குக் கொஞ்சம் மூளையிருந்தால் உடம்புக்காகாதா? அவன் தேகத்தில் ரக்தமில்லையா? நரம்புகளில்லையா? அவனுக்கு சுகதுக்கங்களில்லையா? அவனுக்கு சிரிப்பும் அழுகையும் வராதா? நானும் எல்லாருக்கும் பொதுவான இவ்விஷயங்களைப்பற்றியே எழுதப்போகின்றமையால் நீ பயப்பட வேண்டியதில்லை. மேலும் எம். ஏ பரீக்ஷை கொடுத்தவர்கள் தமிழ் எங்கே எழுதுகிறார்கள்? எழுதுகிறது பேசுகிறது எல்லாம் இங்கிலீஷ். சிராத்தம், சந்தியாவந்தனம் கூட இங்கிலீஷில் இருந்தால் சுலபமாயிருக்கும் என்கிறார்கள்! என்னோடு கூட வேலைசெய்கிற புதிய குமாஸ்தா ஒருவர் எம். ஏ. பட்டம் பெற்றிருக்கிறார். அவரிடத்தில் தமிழில் எழுதிய விண்ணப்பங்கள் ஏதாவது வந்து சேர்ந்தால் அவற்றை நான் அவருக்குப் படித்து அர்த்தம் சொல்லவேண்டியிருக்கிறது!

என் தம்பி ஒருவன் பி. ஏ., பி. எல்., பரீக்ஷை கொடுத்துவிட்டு சென்னப்பட்டணத்தில் ஹைகோர்ட் வக்கீலாயிருக்கிறான். அவனுக்கு கலியாணம் ஆன புதிதில் ஒருநாள் அவன் தன் நாட்டுப் புறத்து மனைவியோடு கூட சமுத்திரக் கரைபோக எண்ணி அவளைக் கூப்பிட்டான்:—

"அடியே, போவோம் வா" என்றான். அவள் "எங்கே போவோம்?" என்றாள்.
"வெளியே போவோம், வா".
"வெளியே எவ்விடத்திற்கு?"
"அங்கேதான் தெரியாதா? பீச்சுக்கு!"
"பீச்சு என்றால் எவ்விடம்?"
"அது தான் தெரியாதா காலையிலே [சொன்னேனே!"
"காலையில் சொன்னது என்னவென்று [ஞாபகமில்லை."

"அடே இழவே, அது தான் என்கிறேன், கறுப்பும், நீலமுமாக மணல் மணலாக, ஜலமும் நுரையுமாயிருக்குமே!"

"சமுத்திரக்கரையா!" "அந்த மண்ணாங்கட்டி கரை தான்!"

"முதலிலேயே அப்படிச் சொல்லலாகாதா!" என்று இருவரும் புறப்பட்டார்கள். இதை மாடியிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த எனக்கு சிரிப்பு அடக்க முடியாமல் வந்துவிட்டது. அவர்களும் என்னைப்பார்த்து சிரித்து விட்டார்கள்.

கவிகளும் வித்வான்களும் எழுதின கிரந்தங்களைப் படிப்பதில் விசேஷ ஆவலுள்ள ஒருவன் சற்று பொழுதுபோக்குக்காக தினம் காலை 7 மணி முதல் இரவு 8 மணி வரையில், "ஆவர்ஜா" புஸ்தகங்களையும், "அடங்கல்" புஸ்தகங்களையும் ஜமாபந்தி கணக்குகளையும் கவனித்துப் பார்த்துக் கொண்டிருந்ததனாலேயே, அவனுக்கு காவியம் நாடகங்களைப் படித்தனுபவிக்கவும் புதிய கிரந்தங்கள் எழு

* தன்னையறிந்து தன் தொழிலில் பிரவேசிக்கும் மனோதர்மசக்தி தடையறியாது.

தவுமுள்ள கடவுள் கொடுத்த சாமர்த்தியம் மழுங்கிப்போமா? “சாதாரணமாகக் குதிரைமேல் சவாரி செய்வேன். சற்று வேகமாய்ப் போக வேண்டுமானால் குதிரையை நான் தூக்கிக்கொண்டு போவேன்” என்றொரு யுத்த வீரன் சொன்னாலும், அதுபோல நிஸ்ஸாரமும் நிஷ்பிரயோஜனமுமான கச்சேரி வேலைகளைச் செய்து அலுத்துப் போனவனுக்குத் தான் ஸங்கீத ஸாஹித்யங்களுடைய சுகம் தெரியும். வெயிலி லிருந்தவனுக்கல்லவோ மலையருவியின் உருசி தெரியும். நான் கச்சேரியை விட்டு வீட்டுக்குப் போகும்போதே, வீட்டில் வேலை செய்வதற்காகக் கொண்டு போகப்படும் சச்சேரிக் கணக்குப் புஸ்தகங்களின் அட்டையிலெல்லாம் வெண்பாக்களும், மணிப்பிரவாள சுலோகங்களும், கதைகளும் கீர்த்தனங்களும் விகடங்களும் பலாப்பழத்தில் ஈ மொய்ப்பதுபோல் மொய்த்துக் கொண்டிருக்கும். கலெக்டர் துரைக்கு அனுப்ப வேண்டிய தபாலின் பின் புறத்தில் மறந்துபோய் சித்திரங்கள் வரைந்து விடுவேன். கச்சேரி வேலை அலுத்துப் போனால், மனோதர்மத்தில் வேலை செய்வேன், மனோதர்ம லீலைகள் அலுத்துப் போனால் கச்சேரி வேலையை எடுத்துக் கொள்ளுவேன். ஆகலால் எழுதுகிற சக்திமட்டுமிருந்தால் ரஸமாய் எழுதக் கூடியவன் தாலூக்கா குமாஸ்தா தான்.

பகலெல்லாம் கரடு முரடான இலக்கங்களிலும் ரூபாய் அணா பைசா தொகைகளிலும் இடறிவிழுந்துபோய்க் கொண்டிருந்த இந்தப் பேனாவுங் கூட, இப்பொழுது இரவில் எல்லாரும் தூங்கிப்போன பிறகு இந்தக் கதையை விநோதார்த்தமாக எழுதுகையில், பகலெல்லாம் வேலைசெய்து சாயந்திரம் கள்ளுக் கடைக்குப்போகும் கூலியாளைப்போல், ஓர்வித உத்ஸாஹமுண்டாகி, சில சமயம் துள்ளிக் குதித்துக் கொண்டும், சில சமயம் வழு வழுப்பாய் வெகு விரைவாய்த் தான் இன்னும் பக்ஷியின் இறக்கையிலிருப்பதாகவே நினைத்துப் பறந்து கொண்டும், ஒவ்வோரிடத்தில் ‘கிரீச்’ சென்று சப்தித்துக் கொண்டும், ஜட்கா வண்டியில் கட்டப்பட்டு கூழாங்கற் சாலையிலடிபட்டு லாடத்தை இழந்த நாட்டுக் குதிரையை சென்னப்பட்டணம் சமுத்திரக்கரைச் சாலையில் தகுந்த சிப்பாய் ஏறி சவாரி செய்தாலெப்படியோ, அப்படி நாட்டியம் செய்துகொண்டு நடை பழகுகிறது. அதற்குக்கூடத் தன் உத்தியோகம் உயர்ந்து விட்டதென்று தெரிகிறது. காட்டில் வழிதப்பிப்போன ராஜகுமாரர்கள் தங்கள் குதிரையை நம்பி அதன் முதுகில் கடிவாளத்தைப் போட்டு விட்டு அது போகிற வழியில் போகட்டுமென்று விட்டு விடுகிறதுபோல், “உச்சைசிரவஸ்” என்னும் தெய்வீகக் குதிரையாகிய மனோ தர்மத்தை நம்பி நானும் என் பேனாவென்னும் கடிவாளத்தை அதனிடத்தில் ஒப்புக் கொடுத்து விட்டு எழுதிக் கொண்டு போகிறேன்.

“இவனுக் கென்னதெரியும்? என்ன அபூர்வ சரித்திரம் எழுதப் போகிறான்?” என்று நினைக்காதே. ஒருவன் அன்றன்று தன் மனதில் தோன்றுவதையெல்லாம் ஒளிக்காமல் தன்னை அயல் மனிதனாக பாவித்து எழுதுவானானால், நாளடைவில் ஒரு ராமாயணம் எழுதி விடலாம். உண்மையை மட்டும் ஒளிக்காமல், ஏறாமல், குறையாமல், உள்ளது உள்ளபடி தைரியமாய்ச் சொல்ல வேண்டியது. நான் சொல்லுகிற பொய்யெல்லாம் கச்சேரியோடு சரி. தப்புக் கணக்குகளையும் பொய் ஜவாப்புகளையும் தவிர நான் யாதொரு பொய்யையுமறியேன். அந்தப் பாபமும் அவைகளுக் கடியில் கையெழுத்துப் போட்ட தாசில்தார்களுக்கே யொழிய எனக் கொன்றுமில்லை. வேண்டுமானால் அவைகளை அவசரமாய்த் தருவித்த கலெக்டர் துரையும் அந்தப் பாபத்தில் பங்கு எடுத்துக் கொள்ளட்டும். இவர்களைச் சார்ந்ததுபோக என் பங்குக்கும் ஏதாவது பாபம் மிகுதி யிருக்குமாயின், அதைப் போக்கடிப்பதற்காகத்தான் இப்பொழுது சத்தியமே சொல்லுகிற தென்று கங்கணங் கட்டிக்கொண்டு என் அனுபவங்களைக் கேட்பவருக்கு தானம்செய்து விடுகிறதாகத் தீர்மானித்து விட்டேன். என்னிடத்தில் தானம் செய்ய வேறென்ன இருக்கிறது? என் கையில் பணம் காசு ஒன்றுமில்லை., என் சம்பளம் மாதம் 20 ரூபாய்தான். அதில் சாப்பிட்டதுபோக மிகுந்ததைப் புஸ்தகங்களும் படங்களும் வாங்கி விடுவேன். ஆதலால் நான் தானம் செய்யக் கூடியது இந்தக் கதைதான்!

"என்னடா இவன் சுத்த கோமுட்டியா யிருக்கிறான். சுலபமாய் புண்ணியம் சம்பாதிக்கப் பார்க்கிறான்" என்று பரிஹாஸம் செய்யாதேயுங்கள். பரோபகாரத்தின் தாத்பரியம் என்ன? எப்படியாவது பிறரை திருப்திசெய்வது தானே! இதைப் படிப்பவர்களில் நூற்றில் 99 பேர் சந்தோஷப் பட்டால் அதுவே எனக்குப் போதும் அதற்குமேல் நான் கேட்கவில்லை.

அதிகமாய் விஸ்தரிப்பானேன்? இதைப் படிப்பவர்களில் யாராவது தாலூக்கா குமாஸ்தாக்களாவது அல்லது அவர்களுக்கு வாழ்க்கைப் பட்டவர்களாவது இருக்கும் பக்ஷத்தில் அவர்களுக்கு நான் சொல்லப் போகிறதெல்லாம் ரஸமாகவே யிருக்கும், அதைக் கேட்க இஷ்டப் படாதவர்கள் இங்கேயே நின்று விடுங்கள்.

1. பாலியம்.

இப்பொழுது என் வாழ் நாளைத் திரும்பிப் பார்வை யிடுகையில், இந்த ஜன்மமே அனாவசிய மென்று தோன்றுகிறது. கொக்கின் தலையில் வெண்ணையை வைக்கும் போதே அதைப் பிடித்து விடாமல், அவ்வெண்ணை உருகி அதன் கண்ணை மறைத்த பிறகு அதைப் பிடிப்பதுபோலும், மூக்கை நேராகத் தொடாமல் தலையை நாலு சுற்று சுற்றிவிட்டுத் தொடுவதுபோலும், என்னுடைய அநுபவங்கள், அவைகளால் நானடைந்த லாபத்தை உத்தேசித்து அனாவசியமாகத் தோன்றுகின்றன. இது ஏற்கனவே தெரிந்திருக்கக் கூடிய விஷயம் தானே, இதை அறிவதற்கு ஊரெல்லாம் சுற்றினேமே என்று தோன்றுகிறது. கடவுள் என்னை ஏமாற்றி விட்டதாகத் தெரிகிறது. என்னை இவ்வளவு கஷ்டப்படுத்தி விட்டுக் கடைசியில் எனக்கு என்றைக் கிருந்தாலும் கிடைக்க வேண்டியதைத் தான் கொடுத்தார். அதிகம் கொடுக்கவில்லை. அல்லது ஏற்கனவே என்னிடத்தி லிருந்ததை, அவர் எனக்குக் கொடுத்ததாகத் தோன்றும்படி ஜாலவித்தை செய்திருக்கிறாரோ என்று கூட சந்தேகிக்கிறேன். * யோஜித்துப் பார்த்தால் இந்த உலகமே அனாவசிய மென்று படுகிறது. இதை சிருஷ்டிப் பதற்கு முன் என்னை ஒரு வார்த்தை கேட்டிருந்தால் கடவுளுக்குத் தகுந்த புத்திமதி சொல்லியிருப்பேன். "ஐயா வீண் சிரமம்! அல்லது, உமக்கென்ன கொழுப்பா? கையைக் கட்டிக்கொண்டு சும்மா இருக்கலாகாதா?" என்று கேட்டு விடுவேன். அதனால் தான் "ஒன்றுக்கும் உதவாதன்தைப் பார்ப்பானிடத்தில் கொடு" என்று எனக்கு உபயோகமற்ற என் சரித்திரத்தை உலகத்துக்கு தானம் செய்ய ஆரம்பித்தேன். இந்தச் சரித்திரத்தில் இன்னது தான் சொல்லப்படு மென்றில்லை. எல்லா விதமான விஷயங்களும் பிரசங்கத்துக்கு வந்து விடும். ஏனெனில் என் அநுபவங்கள் அப்படிப் பட்டவை. "கழுதை புரளாத இடங் கிடையாது" என்றால் அதில் குப்பைமேடும் அடங்கி யிருக்கிறது என்று எல்லாரும் அறிந்து கொள்ளுவார்கள். ஆனால் ஹம்ஸதூளிகா மஞ்சமும் அதில் அடங்கியிருக்கக் கூடும் என்று யாருக்குத் தோன்றும்?

என் கஷ்டங்கள் நான் பிறப்பதற்கு நான்கு வருஷத்துக்கு முந்தி என் தகப்பனாருக்கும் தாயாருக்கும் விவாஹமான பொழுதே ஆரம்பித்து விட்டதாகச் சொல்லலாம். நான் தான் அவர்களுக்கு சீமந்த புத்திரன். எனக்குத் தம்பி ஒருவன் இருக்கிறான் என்று முன்னமேயே சொல்லி யிருக்கிறேன். இவ்வளவு தான் எங்கள் குடும்பம்.

என் தகப்பனாருக்குக் கொஞ்சம் பிதிரார்ச்சித சொத்து இருந்தது. அதை விற்று என்னை இங்கிலீஷ் படிக்கவைத்தார். நான் "வெகு புத்திசாலி" என்று அவர் தாத்பரியம். சீக்கிரம் டிப்டி-கலெக்டர் வேலைக்குவந்து விடுவேனென்று எண்ணிக் கொண்டிருந்தார். அது தான் அவருக்கு உலகத்தில் தேவேந்திர பட்டமாகத் தோன்றிற்று. அது கிடைத்து

* அல்லது அவராக எனக்குக் கொடுத்ததை ஏற்கனவே என்னிடத்தி லிருந்ததாக நான் நினைத்துக் கொள்ளும்படி தான் ஜாலம் செய்கிறாரோ அதுவுந் தெரியவில்லை. ஒரு தாய் தன் குழந்தையை விரலைப் பிடித்து நடத்திக் கொண்டு போனாலும், குழந்தைக்குத் தானாகவே நடந்து விட்டதாகத் தோன்றும்படி செய்யலாம். கடவுளைப் பற்றி ஒன்றும் நிச்சயமாய்ச் சொல்லுகிற தற்கில்லை. காக்கை கறுப்பென்று நாம் சொன்னால் கடவுள் உடனே வெளுப் பென்கிறார். வெளுப் பென்றால் ஊதா என்கிறார், நாம் சொல்வதை யெல்லாம் மறுத்துச் சொல்லுவதே அவர் தொழில் போலும்.

விட்டால் என் மூலமாகத் தானும் பெரிய மனுஷியர்களோடு சரிசமானமாக சகவாசம் செய்யலாமென்று ஆசை வைத்திருந்தார். ஆனால் நான் மெட்ரிகுலேஷன் வகுப்பில் படிக்கும் போதே அவர் சின்னமனுஷியனாகவே இறந்துவிட்டார். ஆனால் இறந்துபோவதற்கு முன் எனக்கு ஒரு தீங்கு செய்து விட்டார். கடவுள் என்னைக் கேட்காமல் என்னை சிருஷ்டித்ததுபோல் என் தகப்பனாரும் என்னைக் கேளாமல் எனக்கு விவாகம் செய்து வைத்துவிட்டு, ஒரு வருஷத்துக் கெல்லாம் தானும் என்னைத் திண்டாட விட்டுப் போய் விட்டார். அப்பொழுது எனக்கு வயது 15. என் தம்பிக்கு வயது 7½. எங்கள் வீட்டில் என் தாயாருக்கும் எனக்கும் என் மனைவிக்கும் என் தம்பிக்குமாக "ஏழரை நாட்டுச் சனி" ஒருவர் மாற்றி ஒருவரைத் தொடர்ந்து கொண்டேயிருப்பான். அவனுடைய முப்பது வருஷத்துச் சுற்றையும் எங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டுவிட்டோம். அவனை எங்கள் வீட்டை விட்டு அனுப்புவதில் எங்களுக்கு இஷ்டமில்லை. என் தகப்பனார் இறந்த வருஷம் மெட்ரிகுலேஷன் பரீக்ஷை எனக்குத் தவறிப் போயிற்று. அடுத்த வருஷம் படிக்கப் பணமில்லை. என் மாமாவே தான் எனக்கு மாமனார். அவரும் சம்சாரி. இருந்தாலும் அவர் என்னை இன்னொரு வருஷம் படிக்க வைத்தார். அதுவும் தவறிப் போயிற்று. இரண்டாவது தடவை பரீக்ஷைக்குப் பணம் கட்டும் பொழுது என் மனைவியின் பெயரையும் கூடச்சேர்த்து என் பெயரைப் பதியவைத்தேன். அவள் அதிர்ஷ்டமும் எனக்கு சனைத்ததாக ஏற்படவில்லை. இரண்டு தடவையும் கணக்கில் தான் தவறிப்போயிற்று. எனக்கு எப்பொழுதும் கணக்கைக் கண்டால் பயம். ஏனெனில் அதில் ரூபாய், வியாபாரம், என்கிற இரண்டு வார்த்தை தான் எப்போதும் விசேஷித்திருக்கும். எனக்கு இவ்வார்த்தைகளைக் கேட்டால் என்னைக்காட்டிலும் பரிசுத்தமான ஒரு ஆத்மாவுக்கு * உண்டானது போல் எனக்கும் மயிர்க் கூச்செடுக்கும். 'கணக்குப்பார்த்தால் பிணக்குவரும்' என்பது புதுமொழி. எப்படியோ சுவாமி தலையில் பாரத்தைப் போட்டுவிட்டு 33 வருஷமாக உத்தியோகம் செய்து விட்டேனே யொழிய இன்னும் நான் உலக விஷயம் தெரிந்தவனல்ல. குழந்தையாகவே காலம் தள்ளி வருகிறேன். கடைக்குப்போய் சாமான் வாங்கத் தெரியாது. வியாபாரம் என்றால்ஒருவரையொருவர் ஏமாற்றுதல் என்று நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். "ஏன் இந்த மாதிரி ரூபாய்க் கணக்கும் வட்டிக் கணக்கும் போட்டுக்கொண்டுஉபாத்தியாயர்கள் தங்கள் பிராணனையும் விட்டுக்கொண்டு சிறுபிள்ளைகள் பிராணனையும் வாங்குகிறார்கள்? வேறு நல்ல கணக்குகள் போடக் கூடாதா?" என்று வருந்துவேன். அப்பொழுது நான் அரபிக் கதைகளில் அடிமை வியாபாரத்தைப் பற்றிப் படித்திருந்தேன். 36-வயதுள்ள அடிமைப் பெண்ணுக்கு 16 பவுன் விலையானால், 16 வயதுள்ள அடிமைப் பெண்ணுக்கு என்ன விலை என்று கேட்டால், 36 பவுன் என்று சொல்லக்கூடிய புத்திசாலித்தனம் என்னைத் தவிர என் வகுப்பில் வேறு யாருக்கும் கிடையாது. கிருஷ்ணபகவானுடைய தராசில் சத்தியபாமையை ஒரு தட்டிலும் ருக்மணி காதில் அணிந்திருந்த சிரீஷபுஷ்பத்தை மற்றொரு தட்டிலும் வைத்து நிறுத்தால் இரண்டாவது தட்டு தான் தாழும் என்பது என்னுடைய "பூதகத்துவ சாஸ்திர" (ஸயன்ஸ்) வாத்தியாருக்குத்தெரிந்திருக்குமா என்று எனக்குள் நானே வியந்து கொள்வேன். ஆதலால் இரண்டாந்தரமும் பரீக்ஷை தவறின உடனே எங்கள் குடும்பத்தின் பாரம் முழுவதும் என் தலையில் விழுந்தமையால் 17 வது வயதில் 7 ரூபாய்க்கு 'தஸ்திரபந்து' உத்தியோகத்திலமர்ந்தேன்.

என் தகப்பனார் என்னை முதல் முதல் இங்கிலீஷ் பள்ளிக்கூடத்திற்கழைத்துக் கொண்டு போனது இன்னும் நன்றாய் ஞாபகமிருக்கிறது. ஏனெனில் அன்று முதல் தான் எனக்கு சனியன் பிடித்து. அதற்கு முன் என் தகப்பனார் எனக்கு வீட்டிலேயே சம்ஸ்கிருதம் சொல்லிவைத்துக் கொண்டிருந்தார். அதில் அமரமும் சபதமும் மனப்பாடமாகி விட்டது. ரகுவம்சமும் கொஞ்சம் படித்திருந்தேன். எங்கள் கிராமத்திற்கும் பள்ளிக்கூடம் இருந்த ஊருக்கும் 10 மயில் தூரம்.

* ராம கிருஷ்ண பரமஹம்ஸ தேவர்.

அவ்வூரில் ஒரு ஏழை வைதிகருடைய வீட்டில் மாதந்தோறும் நெல்லுக்கொடுத்துவிட்டு என் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. சனிக்கிழமை நாயிற்றுகிழமைகளில் பள்ளிக்கூடம் கிடையாதாதலால் கிராமத்துக்கு வந்து விடுவேன்.

நான் இங்கிலீஷ் பள்ளிக்கூடத்திற்குப் போகிறவரையில் என் கிராமத்தை விட்டு வெளியே போனவனல்ல. எனக்குப் புதிய மனிதர்களோடு பேசுகிறதற்கு பயம். என் தோழப் பிள்ளைகளோடு நான் விசேஷமாகக் கலந்து விளையாடுகிறதுகூட இல்லை. எனக்குப் பள்ளிக்கூடத்துக் கட்டடத்தைக் கண்டவுடனே சிறைச்சாலையைக் காண்பது போலிருந்தது. சட்டை தலைப்பாகைகள் போட்டுக்கொண்டு இங்கிலீஷும் பேசுபவர்களைக் கண்டால் எனக்குப் புலி கரடிகளைக் காண்பது போலிருக்கும். நாளைக்கும் ஒரு போலீஸ் சேவகனைக் கண்டால் எனக்கு பயம். நான் வீட்டில் எருமைத்தயிரும் புழுங்கலரிசிப்பழயமுதும் கறிகாய்களும் பாலும் நெய்யும் சாப்பிடுவழக்கம். பள்ளிக்கூடத்துக்குப் போனபிறகு நல்லசோறுகிடையாது. எவக்கு சாப்பாடு போட்டுக்கொண்டிருந்த அம்மாள்பேரில் வஞ்சனையில்லை. அவர்கள் ஏழை! அவ்வூரில் எல்லாசாமான்களும் விலைக்கு வாங்கித் தான் ஆகவேண்டும். காசுகொடுத்தாலும் நல்ல சாமானாக அகப்படாது. அந்தஅம்மாளுக்கு நன்றாய் சமைக்கத் தெரியாது. ஒரே பாத்திரத்தில் மூன்றுவித சாதம் செய்வாள். மேலே அரிசியாயிருக்கும் நடுவில் பொங்கலாயிருக்கும் அடியிற் காந்தலாயிருக்கும். அவ்வூரில் அந்த வீட்டைத்தவிர வேறொரு வீட்டிலும் காசுவாங்கிக்கொண்டும் சாதம்போடமாட்டார்கள், இனாமாகவும் போடமாட்டார்கள். நானே சாப்பாட்டுராமன். இப்படியிருக்க, என் துக்கத்திற்குக் கேட்பானேன்? சனிக்கிழமை நாயிற்றுக் கிழமை எப்பொழுது வரும் என்று காத்துக்கொண்டிருப்பேன். என் தாயார் முகத்தைக் காண, மேகத்தைக்காணும் சாதகப்பக்ஷிபோல் கார்த்துக்கொண்டிருப்பேன். நான் உத்தியோகத்துக்கு வருகிற வரையில் விசேஷமாகப் பொய்சொன்னதில்லை. இருந்தாலும் எனக்குத்தெரிந்து ஒருதடவை வேண்டுமென்றே பொய்சொன்னேன். ஒரு சனிக்கிழமை நாயிற்றுக் கிழமைக்கு கிராமத்துக்கு வந்திருந்த பொழுது நாயிற்றுக்கிழமை சாயந்திரம்கிராமத்திலிருந்து பள்ளிக்கூடத்துக்கு ஒரு வண்டிபோயிற்று. மறுநாள் திங்கள்கிழமை காலையில் நான் பள்ளிக்கூடத்துக்குப் புறப்பட்டால் 10 மயில் தூரம் நடக்க வேண்டுமே என்று என்னை நாயிற்றுக்கிழமை சாயந்திரமே இரவுக்கும் சாதம் கையில் கொடுத்து, அவ்வண்டியிலேயே அனுப்பினார்கள். நானும் ஒரு மயில் போனவுடனே, என் தாயாரைவிட்டு ஒரு இரவு வீணாய்ப் பிரிந்திருப்பானேன் என்று நினைத்துக்கொண்டு, மறுநாளைய பாடபுஸ்தகத்தை மறந்துபோய் வீட்டில் வைத்து விட்டதாகவும் அதை எடுத்துக்கொண்டு காலையில் தான் வருவேனென்றும் சொல்லி வண்டிக்காரனைப் போகச்செய்து விட்டு நான் வீட்டுக்கு வந்து விட்டேன்.

வீட்டுக்குப்போனதும் என்தாயார் என்னைப் பார்த்து ஏனடா திரும்பி வந்து விட்டாய் என்று கேட்டாள். “வண்டிக்காரன் காசுகொடுத்தால்தான் என் வண்டியில் வரலாம் இல்லாவிட்டால் கீழே இறங்கு’ என்று சொன்னான். சாயந்திரவேளையில் தனியாக நடந்துபோகபயமாயிருந்தது; திரும்பிவிட்டேன்” என்று பதில் சொன்னேன். என் தகப்பனார் அப்பொழுது வெளியே போயிருந்தார் “நான் கேட்டதுபோல் உங்களப்பா கேட்டால் என்னபதில் சொல்லுவாய்?” என்று என் தாயார் மறுபடியும் கேட்டாள். உனக்குச்சொன்ன பதிலையே அவருக்கும் சொல்லுகிறேன்” என்றேன். “அது. பிரயோஜனமில்லை-அவர் நம்பமாட்டார்–உன் சுபாவம் எனக்குத்தெரியுமாதலால் நான் நம்புகிறேன். புருஷர்கள் அவநம்பிக்கைக்காரர்கள்.” என்று சொல்லிவிட்டுப போய்விட்டாள. என் தகப்பனார் வந்ததும் அவரிடத்தில் என் தாயார் என்ன சொன்னாளோ என்னவோ, “அந்த வண்டிக்காரப்பயல் வரட்டும் அவனை செருப்பாலடிக்கிறேன். குழந்தையை நடுச்சாலையில் விட்டு விட்டுப்போகிற பயலை என்னசெய்தாலென்ன”? என்று கடுங்கோபமாய்க் கூச்சலிட்டார். நான் பொய்சொல்லுகையில் நாளைக்கு அந்த வண்டிக்காரனை நேரில் கேட்பார்களே என்பதை மறந்துவிட்டேன். என் தகப்பனார் இரைச்சல்போடவே எனக்கு பயமுண்டாகிவிட்டது. நாளைக்கு நமக்கு அவமானத்துக்கு அவமானமும் அடிக்கு அடியும் விழப்போகி

றது என்று நடுங்கினேன். அன்றிரவு தூக்க மில்லை. பொய்சொன்னதின் பலனை நன்றாய் அனுபவித்தேன். என் பக்கத்தில் படுத்திருந்த தாயார், பொய்சொல்லுவதனுலுண்டாகும் கெடுதிகளைப்பற்றி எனக்கு ரஹஸியமாய் பிரசங்கம் செய்தாள். அதற்கப்புறம் நான் அநேக வித்வான்களாகிய புருஷர்களும் ஸ்திரீகளும் நாற்றுக் கணக்கான ஜனங்களுக்குப் பிரசங்கம் செய்வதைக் கேட்டிருந்தும், அன்றிரவு என் தாயாருடைய மிருதுவான வசனங்களைப்போல் அவ்வளவு உருக்கமாய் ஒன்றுங்கேட்டதில்லை. விம்மி விம்மி அழ ஆரம்பித்தேன். அவள் "நீ பயப்படாதே. உன் தகப்பனர் உன்னை அடிக்காமல் நான் பார்த்துக் கொள்ளுகிறேன். இனிமேல் பொய் சொல்லாதே, போ" என்றாள். சற்றுநேரம் கழித்து "நான் பொய் சொன்னது உனக்கெப்படித் தெரிந்ததம்மா?" என்று கேட்டேன். "உன் முகத்தைப் பார்த்ததால் தெரிந்தது" என்றாள்.

நான் திரும்பி வந்த காரணம் அவளை விட்டுப் பிரிய மாட்டாமை தான் என்று என் தாயாருக்கு நன்றாய்த் தெரியும். எனக்குப் பள்ளிக்கூடத்துக்குப்போனல்நல்லசாப்பாடில்லை என்பதை என் தேகஸ்திதியைக் கொண்டே நான் சொல்லாமல் அறிந்துகொண்டாள். நானும் இப்பொழுது எழுதுகிறதைத் தவிர என் கஷ்டங்களைப் பிறரிடத்தில் சொன்னவனல்ல. இருந்தாலும் தன் மகன் படித்து வித்வானாக வேண்டுமென்கிற பேரவாக் கொண்டவளாதலால் வாரந்தோறும் பள்ளிக்கூட மிருக்கப்பட்ட ஐந்து நாளில் இழந்த தேக சௌக்கியத்தை பள்ளிக்கூட மில்லாத இரண்டு நாளில் தேற்றிவிடலா மென்கிற தைரியத்தோடு என்னை விட்டுப்பிரிய சம்மதித்தாள். வருஷத்தில் இரண்டு மாதம் அல்லது மூன்று மாதம் பள்ளிக்கூடம் சாத்தியிருப்பதும் அவளுக்கு ஒரு திருப்தியாயிற்று.

(இன்னும்வரும்.)

தாலூக்கா குமாஸ்தா.

---

## FURTHER REDUCTION OF THE SALT TAX.

### உப்புவரியின்னும் குறைக்கப்பட்டது.

1907-1908-ம் வருஷத்து வரவு செலவு திட்டக்கணக்கு மார்ச்சுமீ 20உ யன்று இந்தியா சட்ட நிரூபணசபையில் அரசிறை மந்திரி மிஸ்டர் பேக்கர் அவர்களால் வெளியிடப்பட்டது. போனவருஷம் வரவு செலவு திட்டக்கணக்குத் தயார் செய்ததில், இந்திய துரைத்தன வருமானமொத்தம் 7 கோடியே 37 லக்ஷத்து 11 ஆயிரத்து நூறு பவுன் (15 ரூ) ஆகவும், செலவு 7 கோடியே 28 லக்ஷத்து 37ஆயிரம் பவுன் என்றும் திட்டம் போடப்பட்டிருந்தது. அந்த திட்டக்கணக்கு இப்பொழுது முதல் 10-மாதங்களில் வந்த வருமானத்தைக் கொண்டு பார்க்கில் வரவு 7,56,26,900 பவுன் என்றும், செலவு 7,43,00,800 பவுன் என்றும், இப்படியாக செலவுக்குமேல் வருமானம் 13 லக்ஷத்து 26 ஆயிரத்து நூறு பவுன் என்றும் தெரியவருகிறது. இவ்வளவு வருமானம் மிகுதியாகியிருப்பதால் ஏழைகளுபயோகிக்கும் உப்பின் மேல் போட்டிருக்கும் வரியைக் குறைக்க வேண்டியது நியாய மென்றுன்னி உப்பு வரியை மணங்குக்கு 1½ ரூபாயாக விருந்ததை ஒரு ரூபாயாகக் குறைத்திருக்கிறார்கள். இது மார்ச்சு மீ 20உ முதல் ஊர்ஜிதத்துக்கு வரும்படி தீர்மானித் திருப்பதால் உப்புவிலை முன்னிலு மிப்பொழுது மூன்றி லொருபங்கு சரசமாக மலியும்.

இந்தியா கவர்ன்மெண்டார் இப்படி உப்புவரியைக் குறைத்திருப்பது ஏழை ஜனங்களுக்கு மிகவும் உபகாரமாம். மூன்று வருஷங்களுக்கு முன் உப்புவரி மணங்கு 1-க்கு ரூபா 2½ ஆகவிருந்தது. 1903-04ம் வருஷத்தில் உப்பு வரி ரூ 2-8-விருந்து ரூ 2-க்கு வரும்படி குறைக்கப்பட்டது. பிறகு ரூ 2 விருந்த உப்புவரியை ரூ 1-8-ஆகக்குறைத்தார்கள். இப்பொழுது மூன்றுந்தடவை ரூ 1-8-விருந்து ரூபா 1-க்குக் குறைத்திருக்கிறார்கள். எல்லாவரிகளிலும் உப்பு மிகவும் தகாதவரி. ஏனென்றால் உப்பு எல்லாருக்கும் அவசியமான வஸ்து: பிராணதாரமானது. ஜனங்களெல்லாருக்கும் அவசியமாயிருப்பதன்றி

கால்நடைகளுக்கும் உப்பு அவசியம். இப்படி மாடு மனுஷன் எல்லாருக்கும் பிராணாதாரமாயிருக்கும் பொருளை வரி போட்டு விலையுயர்த்தினால் அது விலையேறி கிராக்கியாகி விடுகிறது. ஏழை ஜனங்களும் கால்நடைகளும் வேண்டிய அளவுக்கு அதை உபயோகிக்க சாத்தியமின்றி அதனால் பல பிணிகளுக்கு ஈடாகிறார்கள். கால்நடைகளும் உப்புக் குறைவால் பல வியாதிகள் பிடித்து பலம் குன்றி நஷ்டமாகப் போகின்றன. இப்படி பலவாற்றாலும் பயிரிடுங் குடிகளுக்கு கஷ்ட நஷ்டம் விளையக் காரணமாயிருக்கும் உப்பு வரியைக் குறைத்தது மிகவும் நல்லது. வரவர இன்னமும் இதைக் குறைத்துக் கடைசியில் அடியோடு எடுத்து விடுதல் நலமாம். உப்பு வரியை யெடுத்து விட்டால் ஒரு அதர்ம வரி நின்று போனதாகும். இந்த வரியினால் வரும் வருமானம் இவ்வளவு குறைபட்டும் இது தலைக்கு $2\frac{3}{4}$ அணா விகிதம் ஆகிறது. இந்தியா ஜனங்களின் வருமானம் சராசரி பார்க்கில் தலைக்கு ரூ 20-கூட ஆகவில்லை. அகவிலையேறிக்கிடக்கும் இந்நாளில் ஏழை ஜனங்கள் தலைக்கு $2\frac{3}{4}$ அணா விகிதம் அவர்கள் தின்னும் உப்புக்காக வரி கட்டவேண்டுமென்றால் அதுவும் கஷ்டம் தான். இந்தக் கஷ்டத்தை யுணர்ந்து கவர்ன்மெண்டார் சிறுகச் சிறுக இன்னும் இவ்வரியைக் குறைத்து முடிவில் உப்புவரியையே எடுத்து விடுவது பரம சௌக்கியமாம்.

உப்புவரியை இப்படிக் குறைத்ததால் சர்க்காருக்கு வருகிற வருஷத்தில் சுமார் 190 லக்ஷ ரூபாய் வருமானம் குறையுமென்றும், இந்த வருஷத்தில் பாக்கியிருக்கும் இன்னும் 11-நாள்களில் சுமார் 8 லக்ஷம் வருமானம் குறையுமென்றும் தெரிகிறது. உப்பு விலை குறைவதால் உப்பு ஜாஸ்தி செலவாவதினால் வரும் லாபத்தால் ஈடு கட்டினது போக பாக்கி நஷ்டம் இவ்வளவு என்று கணிக்கப்பட்டிருக்கிறது. உப்புவரி குறையக் குறைய உப்பு செலவு ஜாஸ்தியாய் வருகிறது. இதனால் உப்பு வரியைக் குறைத்தது மிகவும் அவசியமான சீர்திருத்தமென்று தெரியவருகிறது. அரசிறை மந்திரி மிஸ்டர் பேக்கர் அவர்களே இதை யொப்புக் கொண்டார். 1903-1904-ம் வருஷத்தில் உப்பு வரி குறைந்ததால் 9 லக்ஷத்து 68 ஆயிரம் மணங்கு உப்பு அதிகம் செலவாயிற்று. 1904-1905-ம் வருஷத்தில் 15 லக்ஷத்து 97 ஆயிரம் மணங்கு அதிகமாகச் செலவாயிற்று. 1905-1906-ம் வருஷத்தில் 13 லக்ஷத்து 32 ஆயிரம் மணங்கு அதிகமாயிற்று இப்படியாக உப்பு வரி குறையக் குறைய உப்பு செலவானது அதிகமாய்க் கொண்டு வந்ததன்றி இந்த வருஷம் முதல் 8-மாதங்களில் செலவான உப்பு இதற்கு முன்வருஷம் 8-மாதங்களில் செலவானதை விட 16 லக்ஷத்து 41 ஆயிரம் மணங்கு அதிகமாயிருக்கிறது என்று மிஸ்டர் பேக்கர் மதிப்பிட்டுச்சொன்னார். இப்படி உப்பு அதிகம் செலவாவதால் கவர்ன்மெண்டாருக்கு உப்பு வரியைக் குறைத்ததால் வந்த நஷ்டம் ஒருவாறு ஈடு கட்டிப் போவதன்றி ஜனங்களும் கால்நடைகளும் உப்பை தாராளமாயுபயோகிப்பதினால் திடகாத்திரராகி உரமும் வலியும் மிகுந்து அதிக வேலைசெய்து உழைக்கத் தக்கவர்களாகிறார்கள். இது தேசச் செல்வத்தை விர்த்திசெய்ய ஒரு நல்ல மார்க்கமாயிருப்பதன்றி தேச க்ஷேமமும் இதனால் விர்த்தியாகும். இப்படியாகப் பலவிதத்திலும் சுபிக்ஷமேயாக முடியும் இந்தச் சீர்திருத்தம் மிகவும் நல்லதும் முக்கியமுமானதாயிருப்பதால். கவர்ன்மெண்டார் இதுவரையில் அனுசரித்த முறையையே பின்னும் பின்பற்றி வர வர உப்பு வரியை இன்னும் குறைத்துக் கடைசியாக அவ்வரியை விலக்கி விடவே வழி தேடுவார்களென்று எண்ணுகிறோம். இவ்வளவு தூரம் ஏழை ஜனங்களுக்கு சகாயம் செய்ததற்காக எல்லாரும் கவர்ன்மெண்டார் செய்யத்துணிந்த இச்சீர்திருத்தத்துக்காக் அவர்களை வாழ்த்தாமலிரார்கள்.

# AYODIYA.
# அயோத்தி.

அலகாபாத்திலுள்ள டேராகஞ்சக்கு சமீபத்திலுள்ள அல்லன்கஞ்சு ரயில் ஸ்டேஷனில் வண்டியேறி வடக்காக பிரதாப்கர் என்ற சந்திப்பு ஸ்டேஷனைக்கடந்து அயோத்திக்குச் செல்லவேண்டும். இந்த பிரதாப்கர் என்பது ஒரு சிறிய இராஜ சமஸ்தானம் ஸ்டேஷனிலிருந்து சுமார் மூன்றுமைல் தூரத்திலுள்ள ஒரு அழகான பட்டணம். ஸ்டேஷனுக்கு சமீபத்திலேயே சில கடைகளும் வீடுகளும் காணப்பட்டாலும் தாமதிக்க சற்றும் வசதியானதன்று. திருடர்களும் போக்கிரிகளும் அதிகம். வண்டியொன்றுக்கு எட்டணு கொடுத்தால் பட்டணம் சேரலாம். இவ்விடத்தில் இறங்குவதற்கு தகுந்த இரண்டு மூன்று தர்மசாலைகளிருக்கின்றன. பட்டணம் கூடியவரையில் அதிக சுத்தமாகவும் நேர்த்தியாகவும் காணப்படுகிறது. இராஜருடைய அரண்மனை அதிக அலங்காரமானகட்டடம். சில தெருவுகள் மட்டும் விஸ்தாரமானதாகக் காணப்படுகிறதேயன்றி மற்றவைகள் பெரும்பாலும் சந்துகள். அலகாபாத்திலிருந்து அயோத்திக்கு நேராக வண்டிகள் செல்கிறதில்லையாதலால் யாம் இந்த ஊரில் ஒருநாள் தங்க நேர்ந்தது. இவ்விடத்திலிருந்து இரவு ஒரு மணிக்குப் புறப்படுகிற வண்டியில் ஏறினால் மறுநாட் காலை எட்டு மணிக்கு அயோத்தி சேரலாம். இது ஒரு சிறிய ஸ்டேஷன். இதற்கு அயோத்தியாகாட் என்று சொல்லப்படுகிறது. ஸ்டேஷனிலிருந்து பட்டணம் அதிகதூரமன்று. அரைமைல் தூரம் சென்றால் நாட்டுக்கோட்டை செட்டிமார்களுடைய சத்திரம் சேரலாம்.

இந்த க்ஷேத்திரமானது வைகுண்டத்திற்கு சமானமானதென்றும், இதின் முக்கிய பாகமானது சுவயம்பு மனுவால் வைகுண்டத்திலிருந்து பூலோகத்திற்குக் கொண்டுவரப்பட்டதென்றும், இதற்கு சாகேதபுரி, சத்திபுரி, விமலை என்ற பெயர்களுண்டென்றும், ஸ்ரீமகா விஷ்ணுவுக்கு இந்த அயோத்தி முகம் போன்றதென்றும், இதில் பிர்ம்மகுண்டம், தசரதகுண்டம், பிரகஸ்பதிகுண்டம் முதலிய அநேக தீர்த்தங்களிருக்கின்றன வென்றும், இதில் பிரவேசித்து ஓடும் சரயு நதிக்கு இராமகங்கா, வசிஷ்டா என்ற பெயர்களுண்டென்றும், இந்தப்பட்டணம் ஆதியில் வைவசுவத மனுவினால் கட்டப்பட்டதென்றும், இது ஒருவராலும் ஜயிக்கப்படாதபடி அவ்வளவு உன்னத காப்புகளை யுடையதாயிருந்தபடியால் இதற்கு அயோத்தி என்றபெயர் கொடுக்கப்பட்டதாகவும், கூறப்படுகிறது.

தசரத சக்கரவர்த்தியால் 60,000-வருஷம் ஆளப்பட்டதும், அவர் குமாரரும் மகாவிஷ்ணுவின் அவதாரமுமான ஸ்ரீராமரால் 12,000 வருஷகாலம் இராஜ்ஜியபாரம் வகிக்கப்பட்டதுமான விடமிதுவே என்றால் அதற்கு வேறு சிறப்பு என்னவேண்டும்? அன்றியும், ஸ்ரீராமர் தம் தம்பிமார்களுடன் அந்திகாலத்தில், சரயு நதியிலிறங்கி தேகத்தோடு வைகுண்டம் சென்றதாகக் கொண்டாடப்படுவதால், சரயு நதியில் ஸ்நானஞ் செய்கிறவர்களுக்கு பலனை விளக்குவதாயிருக்கிறது. இது பூர்வத்தில் 200-மைல் நீளமும் 72-மைல் அகலமு முள்ள பிரமாண்டமான பட்டணமாகவிருந்ததாகவும், ஸ்ரீகாசியே இதற்கு மயானபூமியாக விருந்ததாகவும் கூறப்படுகிறது. பிறகு நேர்ந்த கலகங்களால் பலதடவைகளில் அழிவுற்றும், பலதடவைகளில் புதுப்பிக்கப்பட்டும் வந்ததில் கடைசியாக கி. மு. 87க்கு முந்தி விக்கிரமார்க்க ராஜருடைய வசமாகி புதுப்பிக்கப்பட்டு சுமார் 400 ஆலயங்கள் வரையில் கட்டப்பட்டு உந்நத ஸ்திதியிலிருந்ததாகவும் தெரியவருகிறது. மேற்படி விக்கிரமார்க்க ராஜரால் கட்டப்பட்டதாக சொல்லப்படுகிற ஸ்ரீராமர் ஆலயம் ஒன்றே தான் இப்பொழுது நல்லஸ்திதியிலிருக்கிறது.

தற்காலம் இந்த அயோத்தி மாகாணமானது 24,050 சதுரமைல் விஸ்தீரணமுள்ளதும், இலக்ஷ்மணபுரி என்ற லக்நோவை தலைமை பட்டணமாகக் கொண்டதும், பைசாபாத், அயோத்தி, பிரதலகர், பாரியகர், கொண்டா, சிதாப்பூர் முதலிய சில பட்டணங்களையுடையதுமான செழிப்பான நாடு என்பதில் தடையில்லை. நெல், கோதுமை, சோளம், கரும்பு, பருத்தி, புகையிலை, அபினி, முத்துக்கொட்டை முதலியவைகள் ஏராளமாய் விளைவிக்கப்படுகின்றன. சரயு நதியோரத்தில் உருளைக்கிழங்கு, கத்தரி, வெள்ளரி,

வர்ழை, முதலியவைகள் பயிர் செய்யப்படுகின்றது.

இப்பொழுது இந்த அயோத்தி பட்டணமானது சரயு நதியின் தென் பக்கத்தில் சுமார் 12-மைல் சுற்றளவுள்ளதாயும், நதியின் ஓரத்தில் தகுந்தமாதிரியான படிக்கட்டுகளை கட்டியதாகக் காணப்படாதபோதிலும் இலக்ஷமண்காட், இராமகாட், சுகிரிகாட் என்ற பல நாமங்களையுடைய ஸ்நான கட்டங்களையுடையதாயும், விசாலமான பல தெருக்களையுடையதாயும், மூன்று, நான்கு அடுக்கு மெத்தைகளுடைய பல வீடுகளையுடையதாயும், ராவணனுடைய மூலபலச்சேனைகள் யுத்தத்திற்கு வெளிப்பட்டபோது அங்கும்இராமன், இங்கும் இராமன், எங்கும் இராமன் என்று கூறும்படி ஒவ்வொருவரும் ஸ்ரீராமராகக் காணப்பட்டதாகக் கூறப்படுவதுபோல ஒவ்வொரு வீட்டிலும் கட்டடத்திலும், சத்திரத்திலும், தர்மசாலையிலும் சீதா, லக்ஷ்மண, பரத, சத்துருக்னர், அனுமஸ் ஸமேதராகஸ்ரீராமரை சலவைக்கல் முதலியவைகளில் திவ்விய விக்கிரகங்களாகச் செய்து, பலவித ஆபரணங்களாலும் பட்டாடைகளாலும் அலங்கரித்து திவ்வியமான மண்டபங்களில் பொன்மயமான சிம்மாசனங்களில் கொலுவைத்து தினப்படி பூஜை, நைவேத்தியம், தூபதீபாராதனைகளை வெகு விமரிசையாகச் செய்து வருகிறார்கள். இப்பேர்க்கொத்த ஆலயங்கள் சுமார் 2000த்திற்கு அதிகமாக விருக்கலாமென்று மதிக்கலாம். இவைகளில் முக்கியமானவை:

1. கனகபூவனம்.—என்பது தர்பங்கா இராஜரால் கட்டப்பட்டது. மூன்றடுக்குமெத்தையுள்ளது. மண்டபம் வெகுவினோதமான கட்டடம. பொன்னினால் செய்யப்பட்ட சிம்மாஸனத்தில் ராமர் இலக்ஷ்மணர் முதலியவர்களுடைய விக்கிரகங்கள் வெள்ளைக்கற்களால் செய்யப்பட்டு அதிக விலைபெற்ற ஆபரணங்களால் அமைக்கப்பட்டிருக்கிறது. விக்கிரகங்கள் உயிருடனிருப்பதுபோலவே காணப்படுகின்றன.

2. இரத்தினபூவனம்.—இது ஒரு இந்து அரசரால் கட்டப்பட்ட பிர்மாண்டமான கட்டடம். இதற்குள்ளிருக்கும் இரத்தன பூவனம் என்ற மண்டபம் வெகு விநோதமும் வேலைப்பாடுமுள்ளது. சிம்மாசனமானது பொன்னினால் செய்யப்பட்டு நவமணிகளால் பிரகாசிக்கின்றது. இராமர் விக்கிரகமும் பரதர் விக்கிரகமும் நீலகற்களினாலும் இலக்ஷ்மணர், சத்துருக்னர், சீதை இவர்களுடைய விக்கிரகங்கள் வெள்ளைக் கற்களாலும் செய்யப்பட்டிருக்கின்றன.

3. சிரோய்ராஜா மண்டபம்:—இது வெள்ளைக் கற்களாலேயே கட்டப்பட்ட இரண்டு கோபுரங்களோடுகூடிய அழகான கட்டடம். இந்த கோபுர கலசத்தின்மேரில் பொன்னால் செய்துவைக்கப்பட்ட ஒரு மயிலும், ஒரு பெரியஸர்ப்பமும் வெகு விநோதமாகவும் பயங்கரமாகவும் காணப்படுகிறது. இவ்வாலயத்தில் இரண்டிடத்தில் இராமலக்ஷ்மணர்களுடைய் விக்கிரகங்கள் அலங்கரிக்கப்பட்டு வைக்கப்பட்டிருப்பதுடன் வேதவியாசர் பாரதபடனஞ் செய்வதுபோல விக்கிரகம் செய்தும் வைக்கப்பட்டிருக்கிறது.

4. சீதையின் ஸ்வர்ணவிக்கிரகம்.—இது ஒரு பெரியதும் புராதனமுமானகட்டடம். ஸ்ரீராமர் அஸ்வமேதயாகம் செய்யும் காலத்தில் சீதை வனத்திலிருந்தபடியால் அவ்வம்மனைப்போல் பொன்னால் ஒரு விக்கிரகம் செய்து யாகத்தைநடத்தியதாகவும், அந்த பொன்விக்கிரகமே இப்பொழுதும் இந்தஆலயத்திலிருக்கிறதாகவும் கூறுகிறார்கள். தவிர பிற்காலத்தில் இராம லக்ஷமணர்களுடைய விக்கிரகங்களும் பொன்னாலேயே செயதுவைக்கப்பட்டதாகவும் சொல்லுகிறார்கள். சீதையம்மன்விக்கிரகம் அதிக சிறியதாகவிருந்தபோதிலும் வெகுலக்ஷணமாயும் உயிர்க்களையுள்ளதாயும் காணப்படுகிறது. இதை தரிசிக்கவிரும்புகிற ஒவ்வொருகுடும்பத்தாரும் ஒருரூபாய் கொடுக்கவேண்டும். இரவு ஏழுமணிக்குமேல்தான் தரிசிக்கமுடியும். பகலில யாவருக்கும் தரிசனஞ்செய்யமுடியாது. ஏகாதசி தினங்களில்மட்டும் யாவரும் இலவசமாய் போய்தரிசிக்கலாம்.

இராமர் ஜெனன ஸ்தானம்:—இப்பொழுது இது ஒரு சிறிய கோவில். சுமார் 12 அடிநீளமும் 15 அடிஅகலமுங்கொண்டதாய் 8 அடிஉயரமுள்ளகட்டடம். மனிதர்கள் உள்ளே தாராளமாய்ச் செல்லமுடியாது. ஒரு பண்டா (ஸ்தானிகர்) இவ்விடத்தில் இராம

லக்ஷ்மணர்களுடைய விக்கிரகங்களை வைத்துக்கொண்டும், ஸ்ரீராமர் ஜெனனஸ்தானத்தில் ஒரு சிறியகட்டிலும் அதன்மேல் பட்டினால் செய்யப்பட்டமெத்தை, திண்டு, தலையணை முதலியவைகளையும் வைத்துக்கொண்டு தரிசனஞ்செய்ய வருகிறவர்களிடம் விக்கிரகம், படுக்கை முதலியவைகளைக்காட்டி பைசா வாங்குகிறார். இதற்கு அடுத்தது பெரிய தான மகம்மதியர்களுடைய கோரி. ஸ்ரீராமருடைய ஜெனனஸ்தானத்திலிருந்த பிர்மாண்டமான ஆஸ்தானமண்டபத்தை யிடித்து இந்தகோரி கட்டப்பட்டதாகவும், பிற்காலத்தில் பலதடவைகளில் மகமதியர்களுக்கும், இந்துக்களுக்கும் இந்தவிஷயமாய் கலகங்கள் நடந்து கடைசியாக அக்கோரியின் வாயிலிலேயே இப்பொழுதிருக்கிற இந்த ஆலயம் கட்டப்பட்டதாகவும் கூறப்படுகிறது. கோரியினுடைய வாயிலும் மூடப்பட்டே கிடக்கிறது. இந்தவிடத்தில் எப்பொழுதும் ஒரு திவ்வியமான வாசனையுள்ள காற்று அடித்துக்கொண்டே யிருக்கிறது. இதற்கு சமீபத்தில் அழிந்துபோன பலகட்டடங்களின் அஸ்திவாரம் முதலிய குறிகளை இன்றுங் காணலாம்.

அநுமார் சந்நதி.—இது இலக்ஷ்மணகட்டத்திலிருந்து ஒருமையில் தூரத்தில் ஒரு சிறிய குன்றின் பேரிலுள்ள பெரிய ஆலயம். இம்மலைக்கு செல்வதற்கு பலமான கற்படிகள் கட்டியிருக்கிறார்கள். துளசிதாசர் இந்தவிடத்தில்தான் தங்கி அன்னதானஞ்செய்துக்கொண்டுவந்ததாகவும், அநுமார் இந்தவிடத்தில்தான் அவருக்கு பிரத்தியக்ஷமாகி ஸ்ரீராமபிரானை தரிசனஞ்செய்யத் தகுந்தவழிகளை யுபதேசித்ததாகவும், இப்பொழுது இவ்விடத்தில் பூஜிக்கப்படும் அநுமார் விக்கிரகம் மேற்படி துளசிதாசர் பிரதிஷ்டை செய்து வைத்து பூஜித்ததென்றும், கூறப்படுகின்றது. இந்த ஆலயத்தில் தினப்படி 500—600, பைராகிகளுக்கு அதிக உபசாரமாக அன்னபானாதிகள் அளிக்கப்படுகிறது. இம்மலையின் மீதுள்ள கட்டடம் வெகு பலமாகவும் அழகாகவும் கட்டப்பட்டது.

அயோத்திராஜா மஹால்:—இது சுமார் இரண்டு மைல் சுற்றளவுள்ள விஸ்தாரமான விடத்தில் வெகுஅழகாகவும் கம்பீரமாகவும் கட்டப்பட்ட அரண்மனை. அரண்மனைவாசலுக்கு எதிர் புறத்தில் இரண்டு சிறிய கோவில்கள் கட்டப்பட்டிருக்கின்றன. ஒன்றில் அநுமாரும் மற்றொன்றில் கருடரும் காணப்படுகிறது. வில்வளைவான வாயிலின் இருபுறத்திலும் இரண்டு சிம்ம உருவங்கள்செய்து வைக்கப்பட்டிருப்பதுடன் இரண்டு பெரிய பீரங்கிகளும் வைக்கப்பட்டிருக்கின்றன. உள்ளே யாவரும் சென்று பார்க்கலாம். உள்ளே சென்றால், நடுவில் சுமார் 200—கஜ அகலமும் நீளமுமான காலியிடம் விடப்பட்டு சுற்றிலும் மூன்றடுக்குள்ள மெத்தை கட்டடம் காணப்படுகிறது. இந்த கட்டடங்களில் பல ஆபீஸ்களிருக்கின்றன. இதைக்கடந்து உட்சென்றால் இதே மாதிரியான ஒரு காலியிடமும் சதுரமான கட்டடமும் காணப்படுகிறது. இந்த கட்டடங்களில் கஜானாவும், அதைச் சேர்ந்த ஆபீசுகளும், போலீஸ் டாணாவுமிருக்கின்றது. இதையடுத்ததும் முன் சொன்ன மாதிரியான சதுரகட்டடம் இதில் ஆயுதசாலையும், புஸ்தகசாலையும், வைத்தியசாலையும், அரண்மனையைச் சேர்ந்த பண்டசாலையு மிருக்கின்றன. இதற்கு பின்புறத்தில் ஒரு அழகான சிங்காரவனம். பல விதமான புஷ்பச் செடிகள் இலக்ஷணமாக வைக்கப்பட்டு பரிபாலித்து வரப்படுகிறன்றன. இதில் இளைப்பாறுவதற்கு பலவிடங்களில் பெஞ்சுகள் போடப்பட்டிருப்பதன்றி இரவு வெளிச் சத்திற்காக இலாந்தர்களும் போடப்பட்டிருக்கின்றன. இதைப் பார்த்துக்கொண்டு சற்று தூரம் சென்றால் ஒரு அழகான ஆலயத்தைக்காணலாம். இதில் விஸ்வநாதலிங்கம் என்ற நாமத்தோடு ஒரு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டு திரிகாலங்களிலும் பூஜை முதலியவைகள் அதிக சிரத்தையுடன் செய்யப்பட்டு வருகிறது. இந்த ஆலயத்தின் முன் இந்த சமஸ்தானபதிகளாகவிருந்த அரசர்களுடைய உருவப் படங்களை வைத்திருக்கிறார்கள். இந்த ஆலயத்தின் பின்புறத்திலும் சிங்காரவனம் சூழ்ந்திருக்கிறது. இந்த இராஜருடைய பூர்வ அரண்மனை நாட்டுக்கோட்டை செட்டிமார்களுடைய சத்திரத்திற்கு எதிரிலிருக்கிறது. இதுவும் பலமான கட்டடமே என்றாலும் நாகரீகமான தன்று.

இவைகளைத் தவிர வட தேசத்திலுள்ள ஒவ்வொரு இராஜாவும், ஜமீன்தாரரும், பிரபுவும் இந்த ஸ்தலத்தில் ஒவ்வொரு கட்டடத்

ன்த தன் யோக்கியதைக்குத் தகுந்த விதம் கட்டி அதில் இராம லக்ஷ்மணர்களுடைய விக்கிரங்களை யமைத்து, பூஜை முதலிய வைகளை நடத்திவருகிறார்கள். அன்றியும் பைராகிகளுக்கும் மற்ற பரதேச யாத்திரைக்காரர்களுக்கும் அன்னமளிக்கிற தர்ம ஸ்தாபனங்களும், சதாவிர்த்தி என்பதாக, கோதுமை மாவு, துவரைப்பருப்பு, நெய், வெல்லம் முதலிய வைகளைக் கொடுக்கிற தர்மசாவடிகளும் ஏராளமா யிருக்கின்றன. பட்டணத்தைச் சுற்றி எந்தப்பக்கங்களில் பார்த்தாலும் வெகுதூரம் வரையில் இடிந்து அழிந்துபோன கட்டடங்களையும், மா, புளி, வேம்பு, முதலிய மரங்கள் அடர்ந்த தோப்புகளையும் காணலாம். ஒரு காலத்தில் மண்மாரியடித்து பட்டணமே யழிந்து போயிருக்குமென்று எண்ணும்படியாக சிலமரங்களின் அடிபாகம் சுமார் 25 அடிவரையில் ஒரு வகையான சாம்பல்போன்ற மண்ணால் மூடப்பட்டு அம்மரத்தின் மேல்கிளைகள் மட்டும் இங்கொன்று அங்கொன்றாகக் காணப்படுகிறது. இப்பேர்க்கொத்த பாகத்தில் ஓரிடத்தில் ஒருபாதை வெட்டி வழி ஏற்படுத்தியிருக்கிறார்கள். இது சுமார் 20 அடி ஆழத்திற்கு அதிகமாகவே வெட்டப் பட்டிருக்கிறது. இப்படி வெட்டியெடுக்கப்பட்ட மண்ணை பாதையின் இருபுறத்திலும் மலைபோல் குவித்திருக்கிறார்கள். இப்படி பாதை வெட்டி ஏற்படுத்தி யிருப்பதில் பல கட்டடங்களை கண்டதாகவும் சொல்லுகிறார்கள். தவிர பூமியானது அடிபாகத்தில் கடின மானதாகவு மிருக்கிறதாம். இப்பட்டணத்தில் குரங்குகள் அதிகம். ஒவ்வொன்றும் அதிக காத்திரமானதாயிருக்கிறது. இவைகள் அதிக தொந்திரவு செய்கிறதில்லை என்றாலும் ஒவ்வொருவரும் கையில் பெருத்த தடியை வைத்துக்கொண்டே வெளியில் செல்லுகிறார்கள். இவ்விடத்தில் ஓட்டுவில்லை வீடுகள் கிடையாது. எங்கு பார்த்தாலும் மாடமாளிகையும் கூடகோபுரங்களும், மெத்தைகளுமாகவே காணப்படுகின்றன. நாட்டுக்கோட்டை செட்டிமார்களுடைய சத்திரம் மெத்தைகட்டட மல்லவாயினும் விஸ்தாரமானது. இதிலும் நமது தென்தேச நாகரீக மாதிரியான பஞ்சலோகத்தினால் செய்யப்பட்ட இராம இலக்ஷ்மணர் முதலியவர்களுடைய விக்கிரகங்கள்செய்து வைக்கப்பட்டு தினப்படி பூஜை முதலியவைகள் செய்யப்பட்டுவருகிற ஒரு மண்டபமிருக்கிறது. இதில் பிராமணர்களுக்கு மட்டும் ஒருவேளை அன்னம் போடப்படுகிறது. யாத்திரைக் காரர்களுக்கு தங்குவதற்கு இடமும் கொடுக்கத் தகுந்த விதமான சில கட்டடங்கள் கட்டியிருக்கிறார்கள். ஆனால் அப்படி தங்குகிற வர்களிடத்தில் தினத்திற்கு இவ்வளவு என்பதாக வாடகை வசூல் செய்கிறார்கள்.

சரயு நதியில் ஜலம் சுமார் ஒரு மைல் அகலத்தில் எப்பொழுதும் ஓடிக்கொண்டே யிருக்கிறது. இதைககடந்து செல்ல ஒரு படகுப் பாலம் கட்டியிருக்கிறார்கள். தவிர படகுகளும் ஏராளமாய் உபயோகிக்கப்படுகின்றன. இந்நதி மகா உன்னதமான இமய மலையில் உற்பத்தியாகி அதிக வேகமாய் ஓடிவருகிறபடியால் எப்பொழுதும் ஜலம் அதிக குளிர்ச்சியா யிருக்கிறது. சில சமயங்களில் பனிக் கட்டிகள் ஜலத்தின்பேரில் மிதந்துக் கொண்டு போகுமாம். இதில் முதலைகள் அதிகம். ஸ்நானஞ் செய்யப்பட்ட துறையிலேயே சாதாரணமாய் சிறிய முதலைகளைப் பார்க்கலாம். இந்த தீர்த்த மகத்துவத்தைக் கருதியே தற்காலத்திலும் சில புண்ணியவான்களும் பைராகிகளும் தங்கள் தேகத்தோடு, பரம பதத்தைக் கொடுக்குமென்ற முழு நம்பிக்கையுடன் இந்த நதியில் இறங்கி விடுகிறார்களாம். இந்த நதியில் ஸ்நானஞ்செய்ய வருகிறவர்களுக்கு கணக்கேயில்லை. இவ்விடத்திலுள்ள புரோகிதர்களும் பண்டாக்களும், மற்ற ஸ்தலங்களில் யாத்திரைக் காரர்களை வருத்திப் பிடுங்குவதுபோல செய்யாமல் கொடுத்ததை பெற்றுக்கொண்டு திருப்தி யடைகிறார்கள்.

பட்டணத்தில் ஒவ்வொரு மடத்திலும், ஆலயத்திலும், வீட்டிலும கிணறுகள் வெட்டியிருக்கிறார்கள். கிணறுகள் அதிக ஆழமானவை. இவைகளுக்கு இரண்டடி உயரமுள்ள கைபிடி சுவர் கட்டி அதன்பேரில் குறுக்கும் நெடுக்குமாக சிலமரங்களை போட்டும், மேல்பாகத்தில இரண்டுகஜ சுற்றளவுள்ள ஒரு பெரிய உருளையைபபோட்டும், அதன்பேரில் இரண்டு துனியிலும் இரண்டு இரும்பு வள்ளத்தைக்கட்டிய கயிற்றைப்போட்டும் தண்ணீர் இறைக்கிறார்கள். தண்ணீர் இறைக்கிறவன் கைபிடி சுவற்றின்பேரில் பேரு

ப்பட்டிருக்கிற மரங்களின் பேரில் நின்றுக்கொண்டு மேற்படி கயிற்றை இழுக்க ஒரு வள்ளம் தண்ணீருடன் மேலேவர மற்ற வள்ளம் தண்ணீரைநோக்கிக் கீழேசெல்லுகிறது. ஆனால் தண்ணீர் இறைக்கிறவன் வெகு ஜாக்கிரதையாக மேற்படி மரங்களின்பேரில் நிற்கவேண்டும். சற்று தவறினால் கிணற்றில் விழுவானென்பதில் தடையில்லை. இவ்விடத்தில் ஜனங்கள் இதில் வழக்கப்பட்டிருக்கிறபடியால் சிறிய பெண்களும்கூட வெகு லகுவாயும் அலக்ஷியமாயும் இதில் தண்ணீர் இறைக்கிறார்கள்.

கடைகளில் கத்தரி, உருளைக்கிழங்கு, சேப்பங்கிழங்கு, வெள்ளரி, மிளகாய் முதலியவைகள் ஏராளமாய் விற்கப்படுகின்றன. புளியமரங்கள் அதிகமாக பலவிடங்களிலும் காணப்பட்டாலும் குரங்குகளினுடைய உபத்திரவத்தினால் பலனாகிய புளி கொஞ்சமும் சேர்க்கப்படுகிறதில்லை. இலந்தை, கொய்யா முதலிய பழங்கள் வேண்டியவளவு கிடைக்கின்றன. பால், தயிர், வெண்ணெய், நெய் முதலியவைகளுக்குக் குறைவில்லை. ஜனங்கள் அநேகமாய் விஷ்ணுபக்தர்களாதலால் எவர் வாயினும் ஜே! சீதாராம் என்ற பாராயணமே பலமாயிருக்கின்றது. இதைக்குறைக்க எண்ணங்கொண்டே அவுரங்கசீப் காலத்தில் அநேக இந்து ஆலயங்களை இடித்து பதினான்குவளைவுகள் வைத்து ஒரு பெரிய மஜீதைக் கட்டினார்கள். இதனால் மனிதர்களுக்குள்ள ராமபக்தி யதிகப்பட்டதேயன்றிக் குறைவுபடாததால் 1730-ம் வருஷத்தில் அயோத்திக்கு நான்குமைல் தூரத்தில் பைசாபாத்து என்ற ஓர் பட்டணத்தைக்கட்டி அதில் பிரமாண்டமான சில கோரிகளையும், மஜீதுகளையும், பல கோட்டைகளையும் கட்டினார்கள். இவ்விடத்தில் சவுக்கென்ற கடைத்தெருவு மிகவும் அழகானது. பித்தளைப்பாத்திரங்கள், பலவர்ணங்கள் தோய்த்த துணிகள், தட்டுமுட்டு சாமான்கள் ஏராளமாய் விற்கப்படுகின்றன. டக்கா குடுக்கைகள் செய்து விற்கப்படுகிற கடைகள் மட்டும் 500-க்கு அதிகமாகவே காணப்படுகின்றன. பலவித தானிய தவசக்கடைகள் ஆயிரக் கணக்காயிருக்கின்றன. சாயந்திரவேளையில் இந்தசவுக்கண்டை போய்ப்பார்த்தால் ஜனங்கள் நடப்பதற்கு வழியின்றி தடுமாறுவதைக் காணலாம். தவிர இவ்விடத்தில் அவுரங்கசீப்பினால் ஆக்ராவிலுள்ள டாஜ்மஹாலுக்கு சமமானதாகக் கட்டப்பட்டகோரி விசேஷமான கட்டடம். சுமார் ஒருமைல் சுற்றளவுள்ள மைதானத்தில்கோட்டைபோன்ற மதிள்சுவர்களுடனும் இரண்டடுக்குமெத்தை வைத்துக்கட்டப்பட்ட கட்டடமான வாயிலையுடையதாயும் சுற்றியும் சிங்காரமானதோட்டத்தை யுடையதாயும், மத்தியில் பிரமாண்டமான மூன்றடுக்கு மெத்தையையும் ஸ்தூபிகளையுமுடையதாய் உட்பக்கத்தில் விசாலமான அறைகளை யமையப்பெற்றதாய் 150 கஜநீளமும் அதற்குத்தக்க அகலமும்வைத்துக் கட்டப்பட்டது. இதன் மத்தியஅறையில் சூஜடௌலாவின் மனைவிதாயி ஜீபிகம்என்றவளுடைய கல்லறையிருக்கிறது. இந்தகட்டடத்தை அநிதகிராய் வைத்திருக்கிறார்கள். இந்த பைசாபாத்தை யடுத்துச்செல்லுகிற சரயுநதி இரண்டுமைல் அகலமுள்ளதாயிருக்கிறது. ஸ்ரீராமர் தமது தம்பிமார்களுடன் சரயுநதியில் இறங்கியவிடம் இவ்விடத்தில்தானிருக்கிறது. இதற்குக் கேதாரகட்டம் என்றுபெயர். இதைத் தவிர வேறு சில கட்டடங்களுமிருக்கின்றன. இவைகளுக்கு பலமான படித்துறைகளும் அவைகளுக்கு மேல்புறத்தில் அநேகமண்டபங்களும் மாளிகைகளும் அழகாகக் காணப்படுகின்றன. இவ்விடத்திலிருந்து இமயமலை சார்புகளையும் அதில் பெருகிவரும் நதிகளின் அழகையும்பார்க்க வெகுஆநந்தமாய்த் தோற்றும்.

அயோத்தியிலிருந்து பரதர்தங்கி யராசாண்டுவந்ததாகச் சொல்லப்படுகிற நந்திக்கிராமம் 14 மைல்தூரத்திலிருக்கிறது. இவ்விடத்தில் பரதருடைய ஆலயமிருக்கிறது. இந்த ஸ்தலத்திற்கு ரயில் மார்க்கமாகவும் போகலாம். இதற்கு பரதகுண்டாஸ்டேஷன் என்றுபெயர். அயோத்திக்கு மூன்று மைல்தூரத்தில் சூரியகுண்டம் என்பதாக ஒரு தீர்த்தமிருக்கிறது. இதில் 21-நாள் தினப்படி சூரியோதய காலத்தில் ஸ்நானஞ்செய்தால் வெள்ளைக்குஷ்டம், அடஸ்மாரம் முதலிய வியாதிகள் நீங்கிவிடுவதாக சொல்லுகிறார்கள். அயோத்தியில் ஸ்ரீராம நவமி உற்சவம் அதிக அற்புதமாகக் கொண்டாடப்படுகிறது. இலக்ஷக்கணக்கான ஜனங்கள் கூடுகிறார்கள்.

டி. சி. வேங்கடராமண ஐயர்.

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

### 17-வது அத்தியாயம்.

காமேசுரய்யர் கிருஷ்ணசாஸ்திரிகள் கடிதத்தைக் கண்டு வெகு சந்தோஷம்அடைந்து உடனே கலியாணத்திற்கு ஏற்பாடுசெய்யும்படி எழுதினார். கிருஷ்ணசாஸ்திரிகள் கலியாணத்திற்கு முகூர்த்தத்தைப் பார்த்துவைத்து லக்னபத்திரிகை அனுப்புவதற்கு நாராயணசாஸ்திரிகளைப் போகச்சொன்னார். நாராயணசாஸ்திரிகளுக்கு காமேசுரய்யர் குடும்பத்தில் ராமச்சந்திரன் என்றவபயன் காமேசுரய்யர் சொத்தையும் மகாதேவய்யர்சொத்தையும் கட்டிக்கொள்ளப் பிறந்துவிட்டானே என்று தங்கத்தின் கல்யாணகாலம்முதல் அசூயை அதிகம். ஆனால்வெளியில் காண்பித்துக் கொள்ளக்கூடவில்லை. வெங்கலக்ஷ்மி அம்மாளுக்கு இந்தப்பையனை எப்படியாவதுந மூக்குஇடஞ்சலில்லாமலிருக்கும்படி அனுப்பிவிடவேண்டுமென்ற எண்ணமுண்டு. அந்தப்பையனுக்கே கிருஷ்ணசாஸ்திரிகள்சொத்தும் சேருகிறதென்றால் அவர்கள் அசூயைக்கு கேட்கவும் வேண்டுமோ. நாராயணசாஸ்திரிகள் அந்தக்கல்யாணத்தின் நிச்சிதார்த்தத்துக்கு போகப்போகிறார் என்றுகேள்விப்பட்ட வெங்கலக்ஷ்மி அம்மாள் அவரைப்பார்த்து ஏதோபூவசகல்லூரில் நித்தியச்ராத்தம் நடக்கப்போகிறதாமே! அதற்குநீங்களும் போகப்போகிறீர்களாமே-என்றாள்-நாராயணசாஸ்திரிகள் போகட்டுமா வேண்டாமாவென்றார். அதற்கு அந்தம்மாள் உங்களுக்கு இப்படிக்கேட்கவும் வெட்கமாயிருக்கவில்லையோ! ஏதடாநமது மைத்துனன்பிள்ளைக்குக்கேட்டும் நிர்த்தாக்ஷிண்யமாய் மாட்டேனென்று சொன்னவன்வீட்டு நித்யச்ராத்தத்துக்குநாம் போகிறதாஎன்றுஉங்களுக்குஎங்கே தோன்றுகிறது! என்றாள். நாராயணசாஸ்திரிகள் அடி நித்யச்ராத்தம் என்கிறாயே அப்படித்தானா சொல்லுகிறதுஎன்றார். பின்னே அதென்ன இழவு. எனக்கு நித்யசிரார்த்தம் என்றுதான் வாயில் வருகிறதுஎன்றாள். ஒருவன் எப்போதும் இழவுஎன்றே வாயில்வந்துகொண்டிருந்த ஒருவனைப்பார்த்து என்வீட்டில் கல்யாணம்நடக்கிறது,நீஅதற்குவந்தால் கெட்டவார்த்தை ஒன்றும்சொல்லாதே என்றான். அவன் அப்படியே ஒப்புக்கொண்டு தாலிகட்டும் சமயத்தில் அவனுக்குப்பசியெடுக்கவே பசிபொறுக்கமாட்டாமல் இழவுமுகூர்த்தம் ஆக வெகுநேரமாகிறதே-இழவு-எனக்கு வயிற்றைப் பசிக்கிறதே—என்றான்—சுற்றியிருந்தவர்கள் அடே! கல்யாணம் தாலிகட்டுகிறசமயம் கெட்டபேச்சு பேசாதேஎன்றார்கள்-அதற்கவன் கோபித்துக்கொண்டு பின்னேஎன்ன அய்யா போடுகிறபிண்டத்தை சமயத்தில்போட்டால் செத்தபிணம்போல் கிடப்பேனா இல்லையோ என்றான். அதுபோல் நாராயணசாஸ்திரிகள் வெங்கலக்ஷ்மி அம்மாள் நித்யசிரார்த்தம் என்றதைத் திருத்த இழவுமுதலிய வசனங்கள் இன்னும்அதிகமாக அவள்வாயினின்றும் கிளம்பின. கடைசியில் அவள் நாராயணசாஸ்திரிகளைப் பார்த்துப்பல்லைக் கடித்துக்கொண்டு எங்கேயாவது அவர் போகச்சொன்னால் ஒன்று புறப்பட்டீரா பாரும்! என்று பயமுறுத்தினாள். நாராயணசாஸ்திரிகள் எண்டி அண்ணாபார்த்துச்சொல்லும்போது நான் எப்படிமாட்டேன் என்கிறதுஎன்றார்—அதற்கவள் ஐயோ ஜடமே. அசடனுக்குவாழ்க்கைப்பட்டு ஐயாயிரம்காலம்இருப்பதைவிட சமத்தனுக்கு வாழ்க்கைப்பட்டு சரேலென்று தாலியறுக்கலாம் என்கிறது சரியாயிருக்கிறதே—இந்தஜடத்தைவைத்துக்கொண்டுநான்என்ன செய்கிறது. அவர் போகச்சொன்னால் ஆகட்டுமென்று சொல்லிப்புறப்படுகிற சமயத்தில்—வயிற்றுவலியென்று தள்ளுமே! வேறுயாரையாவது போகச்சொல்லுகிறார் என்றாள். அவர்அப்படியே செய்வதாய் ஒப்புக்கொண்டார்-கிருஷ்ணசாஸ்திரிகள் நாராயணசாஸ்திரிகளைக் கூப்பிட்டுகேட்டதும் அவர்போவதாக ஒப்புக்கொண்டார். கிருஷ்ணசாஸ்திரிகள் லக்னபத்திரிகை வெள்ளிஓலையில்எழுதி அதில் நாலுமூலையிலும் குங்குமத்துக்குபதிலாய் சிகப்புகளைப்புதைத்து கல்கண்டு சர்க்கரை வைப்பதற்கெல்லாம் வெள்ளித்தாம்பாளங்களும் வெள்ளிக்கிண்ணங்களும் சம்மந்திகளுக்கு உயர்ந்த சோமன்புடவைகளும் தயார்செய்தார். தங்கள்வீட்டிற்கு பந்துக்களான சிலபெண்களைக்கூடப் போகச்சொல்லி வண்டிகளெல்லாம் தயார்செய்து தம்பிக்கு சொல்லியனுப்பினார். நாராயணசாஸ்திரிகளைப் பார்க்கப்போனவன் அவர் வயிற்றுவலியோடு தள்ளிக்கொண்டிருப்பதாக வந்துசொன்னான். அனந்தலக்ஷ்மி நல்ல புத்திசாலியாதலால் ஒரு நொடியில் இதெல்லாம் அறிந்துகொண்டு கிருஷ்ணசாஸ்திரிகளைப்பாத்து உங்களுக்குஎன்ன வீண்பைத்தியமா! அவராவது பூவசகல்லூருக்குப் போகவாவது? அவருக்கு ஊரார்பணம் எப்போதும் ஜீரணம் ஆகாதே. அதுதான் அவர்வயற்றில் இருந்துகொண்டு அவர் வயிற்றை வலிக்கச்செய்கிறது. வேறு யாரையாவது பிடித்து அனுப்புங்கள் என்றாள். பிறகு கிருஷ்ணசாஸ்திரிகள் வேறு ஒருவரை அனுப்பினார். பூவசகல்லூர் ஜனங்கள் லக்னபத்திரிகைக்கு இப்படி வெள்ளி சாமான்கள் வைத்ததை பார்த்ததே இல்லை. இதுகளை யெல்லாம் கண்டதும் அந்த ஊரே கூடிவிட்டது. ஒருவர்மேலொருவர் விழுந்துகொண்டு சாமான்களை யெல்லாம் பார்த்தார்கள். நிச்சயதார்த்தம் வெகு சிறப்பாய் நடந்தது. நிச்சயதார்த்தத்துக்காக கமலாவடியிலிருந்து வந்தவர்களெல்லோருக்கும் காமேசுவரய்யர் சோமன் புடைவைகளெல்லாம் கொடுத்தார். பூவசகல்லூரில் எங்கே பார்த்தாலும் கிருஷ்ணசாஸ்திரிகள் வீட்டு சம்மந்தப் பேச்சாகவே இருந்தது.

மறுநாள் ஆற்றங்கரையில் நடந்த வம்பர்மகாஜன சபையில் சேஷி என்பவள் எல்லாம்பிள்ளை யென்றால் அணிப்பிள்ளை தென்னம் பிள்ளை தான். பிறந்தால் காமேசுவரய்யராத்து இராமசந்திரன்போல் பிறக்க வேண்டு மென்றாள். நாகு என்பவள் ஆமாம் எல்லாம் தூரத்துப் பச்சை வெழுமூணுயிருக்கும் கிட்டேபோனால் கல்லும் காடுமாகத்தானிருக்கும். அவன் பிறந்த கஷ்டத்தை விட வேறே கஷ்டம் வேணுமா என்றாள். நாணி யென்பவள்: அடி அப்போது இருந்தால் இப்போது அவன் அதிர்ஷ்டத்துக்கு என்னடி குறைவு! கலியாணத்துக்கு வரதக்ஷிணையே 5000 ரூபா கொடுக்கப் போகிறார்களாம். மாப்பிள்ளை சீர் எல்லாம் தங்க சாமான்களாகவே கொடுக்கப்போகிறார்களா மென்றாள். சேஷி: கொடுத்துத்தான் என்ன! தெய்வமேன்னு அந்தப் பிள்ளைக்கு ஆதரவே கிடையாது. மனுஷ்யாளிருந்தால் எல்லாம் நன்றாயிருக்கு மென்றாள். நாகு: மனுஷ்யாளுக் கென்ன குறைவு. காமாக்ஷியம்மாள் தான் அவ்வளவு பிரியமாயிருக்கிறாளே, அன்றைக்கு நிச்சதார்த்த சாமான்கள் கொண்டு வந்த சம்மந்திகளுக்கு காமாக்ஷியம்மாள் எவ்வளவு உபசாரம் செய்து, ராமசந்திரனுக்கு தலையைப்பின்னி அலங்காரங்களெல்லாம் செய்தாளே என்றாள். நாணி: எல்லாம் வேஷம் தான். மேலுக்கு பார்த்தால் நன்றாயிருக்கிறது. உள்ளே பார்த்தால் ஒக்காளம் தெரியும். அவளைப்போல ஓரவஞ்சனைக்காரி யாரிருக்கிறார்களென்றாள். சேஷி எப்படியாவது கமலாவடி கலியாணத்துக்குப் போய் நாமெல்லாம் வேடிக்கை பார்க்க வேணுமம்மா என்றாள். பிறகு வம்பர் மகாஜனசபை கலைந்தது. நாகுவுக்கு மற்றவர்களை யெல்லாம்விட்டுவிட்டு தான் கலியாணத்திற்கு போகவேண்டுமென்ற எண்ணம். இதற்காக அவள் காமாக்ஷியம்மாள் தயவை சம்பாதிக்க நாணியைப்பற்றித் தான் தூஷிக்கவேண்டு மென்று எண்ணி காமாக்ஷியம்மாளிடம்போய், நாணி அவளை காவேரிக்கரையில் ஓரவஞ்சனைக் காரமுண்டை என்று வைததாக சொல்லிக் கொடுத்தாள். முண்டைஎன்பது நாகுவின் சொந்த கைசரக்கு. காமாக்ஷியம்மாள் அந்தஊர் வம்பர் மகாஜனசபைக்கு அக்ராசனாதிபதி. அக்ராசனாதிபதியையே தூஷிக்கும்போது அவள் அதை கவனியாமலிருக்கலாமா. மறுநாள் காவேரிக்கரையில் காமாக்ஷியம்மாளுக்கும் நாணிக்கும் ஓர்பெரிய யுத்தம் நடந்தது. நாணியம்மாள் நாகு வைததை யெல்லாம் எடுத்துச் சொன்னாள். இப்படிஒவ்வொருவரும் கலகப்பட்டுக் கொண்டதில் அம்பட்டன் குப்பையைக் கிளறினது போல் ஒவ்வொருவரும் காணாத இடங்களில் தூஷித்ததெல்லாம் வெளியில் புறப்பட்டது. கடைசியில் நாகு நாணியைப் பார்த்து ஏண்டி பொய் யெல்லாம் சொல்லறே நீ தூஷித்ததை கேட்டுக்கொண்டு எங்கம்மாஞ்சி கூட இருந்தாரே; அவரைக்கேட்டால் தெரியுமே என்றாள். நாகு தன் அம்மாஞ்சியை வைத்திருப்பதாக அந்த ஊரில் ப்ரஸ்தாபமாதலால், நாணி அவளைப் பார்த்து எல்லாருக்குமே அம்மாஞ்சி சாக்ஷி சொல்வார்களாம்மா. உனக்குஉன் அம்மாஞ்சி என்ன சொல்லச் சொன்னாலும் சொல்லுவாரென்றாள். நாகு அவள் ஜாடையை அறிந்துகொண்டு, நாணி! இருந்தாலும் உன் மாப்பிள்ளை உனக்காக சிபார்சு பேசுவதுபோல எங்கம்மாஞ்சி எனக்கு பேசமாட்டார் என்று நாணி தன் மாப்பிள்ளையை வைத்திருப்பதை சுட்டிக்காட்டினாள். காமாக்ஷியம்மாள் நாகுவுக்கு பரிச்சலாக, ஏண்டி நாணி! நாகுவின் அம்மாஞ்சி சுத்தபைத்ய மென்பது உனக்குத் தெரியாதா. அவனை அவர் வைத்துக் கொள்ளவாவது! அவள் மாமியார் பொய்யாக கட்டினதை நீ நிஜமென்று வைத்துக் கொண்டாயா! அதெல்லாம் பொய்! நான் நடந்த சமாசாரத்தை சொல்லுகிறேன் கேள். நாகுவின் அம்மாஞ்சி ஒருநாள் அவள் வீட்டிற்குப்போய் அவள் மாமியாரில்லாத சமயத்தில் ஒரு இலை கொடு என்று கேட்டான். நாகு இல்லை யென்று சொல்லிவிட்டாள். அம்மாஞ்சி சரிதானென்று வெளியே போகவும் எதிரில் நாகு மாமியார் வந்தாள். அவள் அம்மாஞ்சியை எங்கே வந்தாயென்று கேழ்க்க, அவன்சந்தேகத்தில் சொல்லாம லிருந்தான். அவளுக்கு சந்தேகம் வந்துவிட்டது. மறுபடி எங்கடா வந்தேஎன்றாள். அம்மாஞ்சி என்னம்மா உன் நாட்டுப்பெண் இலை கூட கொடுக்கமாட்டே னென்கிறா ளென்றான். நாகுவின் மாமியார் கோபித்துக்கொண்டு அந்த சிறுக்கிக்கு இவ்வளவு அதிகாரம் உண்டாகிவிட்டதா. அவள் கிடக்கிறாள் உள்ளே வா என்றாள். அம்மாஞ்சி வெகு சந்தோஷப்பட்டு நாகு மாமியாரிடம் இலை கட்டாயம் வாங்கிவிடலா மென்று உள்ளே போனான்—நாகுவின் மாமியார் உள்ளே போனதும் அவளை ஒரு மூச்சு சண்டைபிடித்துவிட்டு வெளியே வந்தாள். அம்மாஞ்சி இலைவரும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்க அவள் அம்மாஞ்சியைப் பார்த்து ஏண்டாப்பா இது நன்றாய் இருக்கிறதா! நேற்று மாமியார் வீட்டுக்கு வந்தவளுக்கு அதற்குள் இல்லை யென்பதற்கு அதிகாரமா? அவள்கிடக்கிறாள். நான் இல்லை யென்று சொல்லுகிறேன். நீ ஆத்துக்குப் போவென்றாள்—அம்மாஞ்சிக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை. அம்மாஞ்சி தானில்லாத சமயத்தில் உள்ளே போனதை யெண்ணி சந்தேகித்து நாகு மாமியார் நாட்டுப்பெண்ணின் அருமையினால் ஏதாவது சொன்னால் அதை நீ நிஜமென்று கொள்ளலாமா என்றாள். பிறகு நாணி என்பேரில் மட்டும் இவள் இல்லாததை யெல்லாம் சொல்லலாமா வென்றாள். பிறகு காமாக்ஷியம்மாள் அக்ராசனாதிபதியாதலால் அவள்வாய்க்கு பயந்து எல்லோரும் ராஜியாகப் போய்விட்டார்கள். காமேசுவரய்யர் ராமச்சந்திரன் கலியாணத்திற்காக 2000—ரூபாய் கடன் வாங்கினார்.

தங்கத்தின் குணாதிசயங்களை இந்த விடத்தில் நாம் சொல்லவேண்டிய தவசியமாயிருக்கிறது. தங்கம் இப்போது விவரம் தெரிந்த பெண்ணாகையால் தனக்கு தன் தகப்பன் சொத்துமட்டும் கிடைக்கிறது. ராமச்சந்திரனுக்கு மட்டும் காமேசுவரய்யர் மகாதேவய்யர் இருவர்களுடைய சொத்தும் கிடை

க்கிறதா என்று அசூயை ஏற்பட்டு விட்டது. ராமச்சந்திரனோடு மேனுக்கு வெகுபிரியம்போல் பாராட்டிவந்தாள். காமேசுரய்யர் சொத்தையாவது தன்னால் கூடியவரையில் ராமச்சந்திரனுக்கு மிஞ்சவிடாமல் அபகரிக்க வேண்டுமென்ற கெட்ட எண்ணம் அவளுக்கு ஏற்பட்டது. ராமச்சந்திரன் கலியாணத்திற்காக வீட்டில் சுமங்கலி பிரார்த்தனை சமாராதனை எல்லாம் செய்யப்பட்டது. தங்கம் சுமங்கலி பிரார்த்தனைக்கு தனக்கு காசிபட்டு வாங்கிக் கொடுத்தால் தான் சுமங்கலி பிரார்த்தனைக்கு இருப்பேன் என்றாள். காமேசுரய்யர் அந்தப்படியே வாங்கிக்கொடுத்தார். அவர் தங்கம் சொன்னபடி வாங்கிக்கொடாவிட்டால் அவள் உடனே அழ ஆரம்பித்து விடுவாள். தங்கம் அழுவதைக்கண்டால் காமேசுரய்யர் கொஞ்சமேனும் சகிக்கமாட்டார். அவர் ராமசந்திரன் கலியாணத்திற்கு தங்கத்தின் சாந்தி முகூர்த்திற்கு புறப்பட்டது போலவே இதற்கும் [illegible] புறப்பட்டார். ஊரில் ஒருவரையும் [illegible] எல்லோரையும் கூட்டிப்போனர். கிருஷ்ண சாஸ்திரிகள் மாப்பிள்ளைக்கென்று ஓர் பல்லாக்கு [illegible]ல்லூருக்கு அனுப்பினர். ராமச்சந்திரன் அதில் ஏறிக்கொண்டு வந்தான். தங்கம் இதை யெல்லாம் பார்த்துப் பெருமூச்சு விட்டாள்.

கிருஷ்ண சாஸ்திரிகள் வீட்டுக் கலியாணத்தை [illegible] வர்ணித்து முடியாது. ஒரே பெண்ணுதலால் கிருஷ்ண சாஸ்திரிகள் பதினாயிர ரூபாய் கல்லியாணச் செலவுக்கென்று எடுத்து வைத்துவிட்டார். அவர் வீட்டு கல்யாணத்திற்கு ஒரு மாதத்திற்கு முன்னேயே எங்கேபார்த்தாலும் வைதீகர்கள் வந்து கூடி விட்டார்கள். ஒவ்வொரு ஊரிலிருந்தும் ஏழை பணக்காரர்கள் சிறுவர்கள் கிழவர்கள், புருஷர்கள் ஸ்திரீகள் இப்படி வித்தியாசமில்லாமல் எல்லோரும் வந்திருந்தார்கள். வைதீர்களோ இரண்டு மாதத்திற்கு முன்னேயே ஒட்டைச்சொம்பு பீத்தமடிசஞ்சிகள் சகிதம்வந்து சேர்ந்தார்கள். சங்கிதத்துக்காக வந்தவர்கள் அனேகர். சதிர்க்காக வந்தவர் அனேகர். தக்ஷிணைக்காக வந்தவர்கள் வெகுபேர்கள். அந்த கூட்டங்களில் திருடலாமென்று வந்தவர் சிலர். இந்தப்படி கலியாணத்தை நடத்திவைக்க கூடிவிட்டார்கள். கிருஷ்ண சாஸ்திரிகள் மாப்பிள்ளைக்கென்று இரட்டைக்குதிரை சாரட்டு ராமபட்டணத்து பட்டகாரனிடம் வாங்கி வந்திருந்தார். ராமசந்திரன் அதிலுட்காரவே சிறபிள்ளை யாதலால் தன்னை அந்த ஊருக்கே ஒரு ராஜாபோல் நினைத்துக்கொண்டு வெகு கௌரவமாக முதுகை வளைக்காமல் உட்கார்ந்தான். நாராயண சாஸ்திரிகள் சம்மந்திகளுக் கெல்லாம் வெகு உபசாரம் செய்தார். சம்மந்திகளை அவர்கள் ஜாகாவில் இறக்கிவைத்து அவர்களுக்கு வேண்டிய 'சப்ளைகள்' எல்லாம் செய்தார். காமேசுரய்யர் அவருக்கு ஏற்கனவே சம்மந்தி; இப்போது இரண்டு விதத்தில் சம்மந்தி யாகிவிட்டார். கலியாணம் நாலு நாளும் நாராயண சாஸ்திரிகள் சிரமப்பட்டதை எல்லோரும் கொண்டாடினர்கள். கிருஷ்ண சாஸ்திரிகள் கூட அவர்பட்ட சிரமத்தைப் பார்த்துவிட்டு நமது தம்பிபோல் நம்மிடம் விசுவாச முள்ளவர்கள் யார் இருக்கிறார்களென்று மனதிற்குள்ளேயே பெருமையடித்துக்கொண்டார். ஆனல் அவர் சர்ப்பம் என்றும், கூடிய சிக்கிரத்தில் விஷத்தைக் கக்கப் போகிறதென்றும் கிருஷ்ண சாஸ்திகள் நினைக்கவில்லை. அவர் வீட்டு கலியாணம் நாராயண சாஸ்திரிகள் மானேஜ்மெண்டான படியால் கல்யாணச் செலவெல்லாம் சங்கீதத்திலும் சதிரிலும் சம்மந்தி உபசாரத்திலும் போய்விட்டது. காமேசுரய்யருக்குத்தான் நினைத்தபடி கலியாணம் முடிந்ததில் வெகு திருப்தி. அவர் உடனே தன் கடன் முழுவதும் அடைந்து விட்டதென்று நினைத்துக் கொண்டார். இன்னும் தாட்டாகச் செலவு செய்து கடன் வாங்கி சுகமாக இருக்கலா மென்று கூட யோசித்தார். ஆனல் அதை நம்பி கடன் தான் மிஞ்சிப்போகிறதென்று அவருக்குத் தெரியவில்லை.

வெங்கிடராம செட்டி யென்று ஓர் கோமுட்டி கண்ணாடி சாமான்கள் வியாபாரம் செய்தான். ஒரு நாள் தன்னை அறியாமல் யோஜனைக்கு உட்கார்ந்து இந்த கண்ணாடிகளை சரியான விலைக்கு விற்றால் போட்ட முதலில் இரண்டுபங்கு லாபம் வரும். மறுபடி சிசாக்கள் வாங்கினல் அது இரண்டு பங்காகும். அப்படியே வாங்கினல் கொஞ்ச காலத்தில் ஓர் பெரிய ஷாப்பு வைக்கலாம். பிறகு அந்த சாமான்களை விற்று பெரிய கம்பெனியாக வைக்கலாம். கம்பனியில் நல்லலாபம் வரும். அதையெல்லாம் சேர்த்து. இரண்டு மூன்று கம்பெனியாக வைக்கலம். பிறகு சொத்துவாங்க ஆரம்பிக்கலாம். கம்பனி லாபம் வரவர சொத்து வானமாக விருத்தியாகும். சொத்தைக் கொண்டு ராஜா தன் பெண்ணைக் கொடுக்கிறேன் என்பான். நாம் கலியாணம் செய்துகொண்டு ராஜாவைக் கூட அடிக்க வேண்டும். அப்போது ராஜா போக்கிரித்தனம் செய்தால் அவன் பெண்ணைப் பார்த்து ஒரு உதை இப்படித் தான் கொடுப்பேன் என்று தான் நினைவு இல்லாமலே சிசாக்கள் மீது ஒரு உதை உதைத்தான். சிசாக்களெல்லாம் கீழே விழுந்து உடைந்து போனபின், தான் அப்போது ராஜா பெண்ணை கல்யாணம் செய்யவில்லை; அது வீண் மனக் கோட்டை! சிசா உடைந்து பொருள் நஷ்டமானது தான் மிச்சமென்று கண்டான்.

அதுபோல காமேசுரய்யர் மனக் கோட்டைப்படி ஏக கடனை வாங்கினர். கலியாணத்தில் வைதீகர்களுக் கெல்லாம் தக்ஷிணையைக் கொடுத்து விட்டார்கள். அவர்களுக் கெல்லாம் பக்ஷணவகைகள் கூடப் போடுகிறதில்லை. கலியாணங்களில் தங்கள் சம்மந்திகளை உபசாரம பண்ணுகிறது எப்போதும் இருக்கிறது. கலியாணத்திற்கு மட்டும் வந்துவிட்டு பிறகு வரக்கூடாத அந்நியருக்குத்தான் தகுந்த உபசாரம் செய்யவேண்டு மென்பதை அனேகர் மறந்து விடுகிறார்கள். சம்மந்திகள் வேண்டாம் வேண்டாம் என்கிற போதே அவர்களுக் கெல்லாம் நல்ல பக்ஷணவகைகளைப் போட்டு அவர்கள் எறிந்து விட்டுப் போனர்கள். அந்த பக்ஷணங்களை சாப்பிடலா மென்றே வந்த வைதீகர்களுக்கு கண்ணில் கூட காட்டவி

ல்லை. இப்படிச் செய்ததில் எல்லோரும் வருத்தப்பட்டு தூஷித்துக்கொண்டு போனார்கள். கிருஷ்ண சாஸ்திரிகளுக்கு இதெல்லாம் தெரியாது. நாராயண சாஸ்திரிகள் வேண்டுமென்றே தன் தமயன் வீட்டு கலியாணத்திற்கு ஒரு தூஷணையைக் கொண்டுவந்து வைக்க வேண்டுமென்று இப்படிச் செய்தார். கலியாணம் முடிந்த பிறகு சம்மந்திகளை ஒரு மைல் தூரம் வரையில் கொண்டுபோய் விட்டு கிருஷ்ண சாஸ்திரிகள் இருப்பிடம் வந்து சேர்ந்தார்.

எஸ். இராமஸ்வாமி ஐயர், பி. ஏ.

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(From Shakespeare).

## ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி.

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு)

*By Sri Rajanayaki.* ஸ்ரீராஜநாயகி.

### நாங்ாவது அங்கம்.

காக்ஷி 1. { இடம்:—அரண்மனை யில் ஒரு அறை. காலம்:—காலை.

(ராஜா, ராணி, கடோர்க்கஜசேனன், உக்கிருத்திரப்பிரதாபன் இந்நால்வரும் வருகிறார்கள்.)

**ராஜா**:—என் இப்படி பெருமூச்சு விடுகிறாய்? என்னவோ பிரமித்து விழிக்கிறாயே, என்ன விசேஷம்? சீக்கிரம் சொல்-உன் மகன் எங்கே? ஒளியாமல் சொல்!

**ராணி**:—சற்று அப்பால் போகிறீர்களா?

(கடோர்க்கஜசேனனும் உக்கிருத்திரப் பிரதாபனும் போய்விடுகிறார்கள்.)

ஐயோ அம்மா ராத்திரி கண்ட காக்ஷியை என்னென்று சொல்வேன்?

**ராஜா**:—என்ன கண்டாய் ஜோதி? ஹேமசந்திரன் என்ன சொன்னான்?

**ராணி**:—அந்தப் பைத்தியத்தை என்னென்று சொல்வேன்! காற்றும் மழையுங் கலந்தடித்தாற்போல் ஒரே சீறலாய்ச் சீறுகிறான். அந்தச் சீற்றத்தில் இன்னது செய்கிறோமென்று தெரியாமல், திரை மறைவில் ஏதோ அரவம் கேட்டு, "எலி, எலி," என்று கத்திக்கொண்டோடி அங்கு மறைந்திருந்த பெரியவரை ஒரே குத்தாய்க் குத்திக் கொன்றுவிட்டான்.

**ராஜா**:—அடாடா! இதேது மோசமாயிருக்கிறது! நாமங்கிருந்தாலும் நம்மையும் அப்படித்தானே கொன்றிருப்பான். இவனை இப்படி யதேச்சையாய் விட்டுவிடுவது எல்லாருக்கும் ஆபத்தாயிருக்கிறதே! உனக்கும் சரிதான் எனக்கும் சரிதான் இன்னும் மற்ற யாவருக்குமே இவனுடைய நடவடிக்கை பயத்தை விளைவிக்கிறது. அது போகட்டும்! இப்பொழுது இந்தக் கொலைக்கு நாமென்ன உத்தரவாதம் சொல்லுகிறது? இந்தப் பழி நம்மைத்தானே பிடிக்கும்! இவனைப் பைத்தியமென்று தெரிந்திருந்தும் நாலுபேருக்கு நடுவில் போகாதபடி இவனைக் கட்டிப்போட்டு வைக்காமலிருந்தது நம் பேரில் குற்றமாகச் சொல்லுவார்கள். நாமோ அவனிடத்திலிருந்த புத்திர வாஞ்சையினால் அவனுக்குச் செய்யவேண்டிய சிகித்ஸைகளைச் செய்யாமல் விட்டுவிட்டோம். ரகஸியமான வியாதியை வைத்தியனிடத்தில் சொல்லாமல் ஒளித்துவைப்பது போல் கடைசியில் திடீரென்று பிராணனுக்கே ஆபத்தாகிவிட்டது. இப்பொழுது அவன் எங்கே?

**ராணி**:—அவருடைய பிரேதத்தினுடைய தகனத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருக்கிறான். இப்பொழுது பைத்தியம் தெளிந்து நல்ல புத்திவந்து பச்சாத்தாபப்பட்டு அழுகிறான். தான் செய்தது குற்றமென்றும் அதற்குள்ள தண்டனைக்குடன்படுவதாகவும் ஒப்புக்கொள்ளுகிறான்.

**ராஜா**:—நல்லது போவோம் வா ஜோதி! இன்று சாயங்கிரம் அஸ்தமனத்துக்குள் இவனை மூட்டை கட்டிப் பூனாவுக்கு அனுப்பிவிடுகிறேன். இந்தப் பாதகமான செயலை இனி நம்மால் கூடிய சாமர்த்தியத்துடனே மறைத்து இவனை மன்னிக்கவும் வேண்டியதுதான்—யாரையா அங்கே கடோர்க்கஜசேனா!

(உக்கிருத்திரப்பிரதாபனும் கடோர்க்கஜசேனனும் திரும்பி வருகிறார்கள்.)

ஐயா, நீங்களிருவரும் இன்னும் உதவிக்கு வேண்டிய மனுஷியர்களை அழைத்துக்கொண்டு ஹேமசந்திரனைத் தேடிக்கொண்டு வாருங்கள். அவன் ஏதோ வெறி பிடித்திருந்த வேளையில் புலஸ்தியவர்மாவைக் கொன்றுவிட்டானும். அவனை நல்ல வார்த்தையாகப் பேசி இங்கே அழைத்து வாருங்கள். பிரேதத்தை ருத்திரபூமிக்குக் கொண்டு போகச் சொல்லுங்கள். நாமே சற்றுப் பொறுத்து நேரில் அங்கே போவோம். சீக்கிரம் தயவுசெய்து துரிதப்படுத்துங்கள்!

(உக்கிருத்திரப்பிரதாபனும் கடோர்க்கஜசேனனும் போய்விடுகிறார்கள்.)

இனி நாம் நம்முடைய முக்கிய சிநேகிதர்களையும் ஆலோசனை சபையோர்களையும் அழைத்து அவர்களிடத்தில் நவறிப்போய் நடந்துபோனதையும் அதற்கு நாம் செய்யப்போகிற பரிஹாரங்களையும் விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டும். அப்படி செய்தால் [illegible] அபவாதம் நம் பேரில் பாயாது! இல்லாவிட்டால் [illegible] அப்புபோல் இன்னொன்று பாரா[illegible]யும் பழிவாங்கும். உலை வாயை மூடலாம், ஊர் வாயை மூடலாகாது! நானென்ன செய்வேன் [illegible]! எனக்கு ஒன்றுந் தோன்றாது பிரமிக்கிறேன். இடிவிழுந்தாற்போலிருக்கிறது!

(எல்லோரும் போய்விடுகிறார்கள்.)

———

காக்ஷி 2. { இடம்:—அந்தப்புரத்தில் ஒருஅறை.
காலம்:—காலை.

(ஹேமசந்திரவின் வருகிறான்).

ஹேமசந்:—அவரை அடக்கம் செய்வதற்கு வேண்டிய எற்பாடுகளெல்லாம் செய்தாகிவிட்டது.

உக்கிருத்திர } (உள்ளிருந்து)
கடோர்க்கஜ } சுவாமி! மகாராஜ்!

ஹேமசந்:—யாரது கூப்பிடுகிறது? என்னைத்தான் கூப்பிடுகிறார்களா? இதோ அவர்களே வந்துவிட்டார்கள்.

(உக்கிருத்திரப்பிரதாபனும் கடோர்க்கஜசேனனும் வருகிறார்கள்.)

உக்கிர:—பிரேதத்தை என்ன செய்தீர்கள், சுவாமி?

ஹேமசந்:—மண்ணோடு மண்ணாய்க் கலந்துவிட்டேன்-அப்படித்தானே செய்யவேண்டும்? அதிலொன்றும் பிசகில்லையே?

உக்கிர:—அதை எங்கே வைத்தீர்கள்?

ஹேமசந்:—அப்படி நினைக்கவேண்டாம்.

உக்கிர:—எப்படி நினைக்கவேண்டாம்?

ஹேமசந்:—நீங்கள் கேட்கிற கேள்விக்கெல்லாம் பதில் சொல்லிக்கொண்டிருப்பேனென்று! மேலும் ஒரு கருப்பஞ்சக்கை கேட்கிற கேள்விகளுக்கு ஒரு ராஜகுமாரன் என்ன பதில் சொல்லுவான்?

உக்கிர:—நானென்ன கருப்பஞ்சக்கையா?

ஹேமசந்:—ஆம்! ராஜசேவை என்னுந் தேனிலூறப்போட்ட கருப்பஞ்சக்கை. நீங்களெல்லாம் கடைசியில் ராஜாவுக்கு மிக்க உபகாரம் செய்வீர்கள். இப்பொழுது ராணு அவர்கள் குரங்கு மாங்கனியை அடக்கிக்கொண்டிருப்பதுபோல் உங்களையெல்லாம் குறட்டி லடக்கிக்கொண்டிருக்கிறார். நாளைக்குத் தனக்கு வேண்டும்போது ஒரு நசுக்கு நசுக்கினாரானால் நீங்கள் குடித்திருக்கும் தேனையெல்லாம் பிழிந்துகொண்டு உங்களைத் துப்பிவிடுவார்.

உக்கிர:—நீங்கள் சொல்வது அர்த்தமாகவில்லை.

ஹேமசந்தி:—அர்த்தமாகவேண்டுமென்று யார் சொன்னார்கள்? உங்களைச் சிறுபாஷையில் ஸ்தோத்திரம் செய்தால் உங்களுக்கு என்ன தெரியும்?

உக்கிர:—நீங்கள் என்னவேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளுங்கள். அந்தப்பிரேதத்தை வைத்திருக்கிற இடத்தைச் சொல்லிவிட்டு எங்களோடுகூட ராணு அவர்களிடத்திற்கு வரவேண்டும். தங்களைக் கையோடு அழைத்துவரச் சொல்லி உத்தரவு.

ஹேமசந்:—பிரேதம் என்கிற வஸ்து ராணு போகவேண்டிய இடத்திலிருக்கிறது. ராணு என்கிற வஸ்து—

உக்கிர:—ராணு அவர்கள்வஸ்துவா!

ஹேமசந்:—ஆம்! ஒன்றுமில்லாதவஸ்து! சூனியப்பொருள். நல்லது அவரிடத்துக்கே போவோம் வாருங்கள்! தோளில் ஆட்டுக்குட்டியைப் போட்டுக்கொண்டு ஊரெல்லாம் தேடுவோம் வாருங்கள்.

(எல்லோரும் போய்விடுகிறார்கள்.)

———

காக்ஷி 3. { இடம்:—அரண்மனையில் ஒரு அறை.
காலம்:—காலை.

(சேவகர்களோடு ராணுவருகிறான்)

ராணு:—பிரேதத்தையும் அவனையும் தேடிப்பிடித்துக்கொண்டு வரும்படி ஆள்களை அனுப்பியிருக்கிறேன். இந்தப்பயலை இப்படி யதேச்சையாய்த் திரியவிடுவது எவ்வளவு மோசமாயிருக்கிறது! இருந்தாலும் இவனைச் சட்டப்பிரகாரம் தண்டிக்கக் கூடவில்லை. பாமர ஜனங்கள் இவனிடத்தில் ஏதோ பிரமைவைத்திருக்கிறார்கள். அவர்களுக்கென்ன நியாயம் தெரிகிறதா? மனுஷியனுடைய யோக்கியதை தெரிகிறதா? கண்ணுக்கு லட்சணமாய் பொம்மலாட்டத்து ராஜாவைப்போலிருந்தால் போதும்! இவனை இப்பொழுது தண்டிக்கப்புகுந்தால் அந்த தண்டனை பெரிதாகத் தோற்றுமேயொழிய இவன் செய்த குற்றம் அவர்களுக்குத் தெரியாது. எல்லாரையும் சமாஸப்படுத்திக்கொண்டு போகும்பொருட்டு இவனைப் பூணுவுக்கு அனுப்புதலே தீர்க்காலோ

சனையின்பேரில் வேறு விதியில்லாமல் அனுப்பியே தீரவேண்டியதாகத் தீர்மானித்த விஷயம்போல் காண்பிக்கவேண்டும். மிஞ்சிப்போன வியாதி முரட்டுத்தனமான வைத்தியத்தில் தெளிந்தால் தெளியலாமே ஒழிய வேறு வழியில்லை.

(உக்கிருத்திரப்பிரதாபன் வருகிறன்.)

என் வந்துவிட்டீர்? என்ன நடந்தது?

உக்கிர:—பிரேதம் எங்கிருக்கிறதென்று அவர் சொல்லுகிற வழியாயில்லை.

ராணு:—நல்லது அவனெங்கே?

உக்கிர:—வெளியே நிற்கிறர். காவல் வைத்திருக்கிறேன். சமுகத்து ஆக்ஞையைத் தெரிந்து கொண்டுபோக வந்தேன்.

ராணு:—அவனை இங்கே கொண்டுவா.

உக்கிர:—ஓய் கடோர்கக்ஜசேனு, அவரை இப்படி அழைத்துவா.

(ஹேமசந்திரனும் கடோர்க்கஜசேனனும் வருகிறர்கள்.)

ராணு:—ஏனப்பா ஹேமசந்திரா, புலஸ்தியவர்மா எங்கே?

ஹேமசந்:—விருந்துக்குப் போயிருக்கிறர்.

ராணு:—விருந்துக்கா! அது எவ்விடத்திலே?

ஹேமசந்:—அவர் சாப்பிடவில்லை. அவரைத்தான் சாப்பிடுகிறர்கள். பஞ்சபூதங்களுக்கு அதிபரான தேவதைகளாகிய இந்திரன், வருணன், வாயு, அக்கினி இவர்களுக்கெல்லாம் யமன் விருந்தளிக்கிறன். இந்த யமன் தான் இவர்களுடைய மகா சபைக்கெல்லாம் அதிபதி. இப்பொழுது புலஸ்தியவர்மாவை என்னசெய்கிறதென்பதைப் பற்றி இவர்களுக்குள் மந்திராலோசனை நடக்கிறது. இவர்களுக்குத் தோட்டிமுதல் தொண்டமான்வரையில் யாராயிருந்தாலும் ஒரே விருந்துதான். வித்தியாசமில்லை. கொழுத்த பணக்காரனும் இளைத்த ஏழையும் இருவகைப் பணியாரங்களே ஒழிய வேறென்றுமில்லை. நாம் சாப்பிடும் பொருட்டு ஆடு கோழிகளையெல்லாம் கொழுக்க வைக்கிறேம். யமன் சாப்பிடும்பொருட்டு நம்தேகத்தைக் கொழுக்கவைக்கிறேம். இந்த யமனுக்கு மிஞ்சின சாப்பாட்டுராமன் கிடையாது!

ராணு:—அடாடா, இதென்ன கிரஹசாரம்!

ஹேமசந்:—ஒரு ராஜாவைச் சுட்டால் ஒருபிடி சாம்பலாகிறது. அதிலிருந்து ஒருபிடி புல் முளைக்கிறது. அந்தப் புல்லை ஒரு ஆடு தின்கிறது. அந்த ஆட்டை ஒரு பறையன் தின்கிறன்.

ராணு:—என்ன தகவலில்லாமல் உளறுகிறயே?

ஹேமசந்:—ஒன்றுமில்லை, ஒரு ராஜாவாயிருந்தவன் எப்படி ஒரு பறையன் வயிற்றில் ஊர்கோலம் போகும்படி சம்பவிக்கலாம் என்பதைக் காண்பித்தேன்.

ராணு:—அதிருக்கட்டும், புலஸ்தியவர்மா எங்கே?

ஹேமசந்:—சுவர்க்கலோகத்திலிருக்கிறர்; அங்கே ஆளை அனுப்பிப் பாருங்கள்; அங்கே அகப்படாவிட்டால் மற்றொரு உலகத்தில் நீங்களே போய்ப் பாருங்கள். அங்கேயுமில்லாவிட்டால் ஸ்மசானத்துக்குப் போய் பார்த்தால் அங்கே ஒருக்கால் அகப்படலாம்.

ராணு:—யாரடா அங்கே, சீக்கிரம் அங்கே போய் பார்த்துவந்து பதில் சொல் நமக்கு.

(சில சேவகர்கள் போகிறர்கள்.)

ஹேமசந்:—அவசரப்படவேண்டாம்; அவர் நீங்கள் போகிறவரையில் காத்துக்கொண்டிருப்பார்.

ராணு:—ஹேமசந்திரா, நீ செய்திருக்கிற காரியத்தை உத்தேசித்து உன்னுடைய க்ஷேமத்துக்காகவே நீ செய்த காரியம் எவ்வளவு அக்கிரமமாயிருந்தபோதிலும் உன்னிடமுள்ள அபிமானத்தினுல் உன்னுடைய க்ஷேமத்தை நாம் மறக்கக் கூடவில்லை—உன்னை சீக்கிரம் மகாராஷ்டிர [illegible] நமக்குப் பிரதிநிதியாக அனுப்ப உத்தேசி[illegible] கிறேம். உனக்குத் துணையாக இதோ உன் [illegible] ழர்களிருவரையும் அனுப்புகிறேம். பரிவாரங்களும் பல்லக்குகளும் காத்துக்கொண்டிருக்கின்றன. நீ யும் உடனே புறப்படத் தயாராயிரு. புலஸ்தியவர் மாவின் பிரேதத்தை அடக்கம் செய்யவேண்டிய ஏற்பாடுகள் செய்துவிட்டு உடனே உன்னையும் உன் தோழர்களையும் பூனுவுக்கு அனுப்பவேண்டும்.

ஹேமசந்:—பூனுவுக்கா?

ராணு:—ஆமப்பா.

ஹேமசந்:—நல்லது, அப்படியே ஆகட்டும். எல்லாம் நமக்கு நன்மையாகவே முடியும்.

ராணு:—நீ நம்பினுலும் நம்பாவிட்டாலும், நம்முடைய கோரிக்கையும் அதுதான்.

ஹேமசந்:—நான் நம்பவேண்டிய அவசியமில்லை; நான் நம்புகிற கடவுளுக்குத் தங்கள் கோரிக்கை இன்னதென்று தெரியும். என்னுடைய ஒத்தாசை இல்லாமலே அக்கினிபகவான் புலஸ்தியவர்மாவைக் கவனித்துக்கொள்வார். ஆதலால் நான் பூனுவுக்குப் போய்வருகிறேன், அம்மா உத்திரவுகொடு.

ராணு:—அம்மாவா! உன் சிற்றப்பா வல்லவா?

ஹேமசந்:—அம்மாதான். அம்மாவும் அப்பாவும் ஸ்திரீ புருஷர்கள். ஸ்திரீ புருஷர்கள் ஒரு தேகம், ஒரு ஆத்மா. ஆதலால் அம்மாதான். நல்லது பூனுவுக்குப் புறப்படுவோம்.

(என்று போய்விடுகிறன்.)

ராணு:—அவன் பின்னேடு போங்கள். அவனை சீக்கிரம் பிரயாணப்படுத்துங்கள். நல்ல வார்த்தை சொல்லி அழைத்துப்போங்கள். இனி தாமதிக்கக் கூடாது. இதற்குமேல் ஆகவேண்டிய காரியங்களெல்லாம் எழுதி முத்திரை போட்டாகிவிட்டது. தயவுசெய்து சீக்கிரப்படுத்துங்கள்.

(உக்கிருத்திரப்பிரதாபனும் கடோர்க்கஜ சேனனும் போய்விடுகிறார்கள்.)

மகாராஷ்டிரப் பையா, நாம் சொன்னது ஞாபகமிருக்கட்டும்! நம்முடைய சிநேகம் உனக்கு அவசியமென்பது உண்மையானால்—அது அவசியமென்பது துலுக்கப்பயல்களோடு சண்டைபோட்ட அன்றைக்கே உனக்குத் தெரிந்திருக்கும்—அந்த சிநேகம் நீடித்து நிற்கவேண்டுமென்று ஆசையிருந்தால், நாளை யெப்பொழுதாவது மறுபடி நம்முடைய உதவி உனக்கு வேண்டியிருக்குமென்று ஞாபகமிருந்தால் நம் சொல்லைத் தட்டாமல் கடிதத்தில் கண்டிருக்கிறபடி அதைப் படித்தவுடனே ஹேமசந்திரனைத் தீர்க்குப்போட்டுவிடு. அவன் உயிரோடு இருப்பது என் ரத்தத்தில் விஷம் ஏறினதுபோல் பிராணவஸ்தையாயிருக்கிறது. அதற்கு நீதான் தகுந்த வைத்தியம் செய்யவேண்டும். அவன் இறந்தான் என்கிற செய்தி கேட்கிறவரையில் என் ஆ[illegible]து சுகப்படாது; எனக்கு எவ்வளவு ஜயம் வந்தவிடவி[illegible]ம் ஐயமாகத் தோற்றுது.

(போய்விடுகிறான்.)

---

## காக்ஷி. 4.

இடம்:—ஒரு பெரிய திடல்.
காலம்:—பகல்.

(பிரதாபஸிங், ஒரு சேனைத்தலைவன், யுத்தவீரர்கள் எல்லோரும் பேரிகை வாத்தியமுழக்கத்துடன் வருகிறார்கள்).

பிரதாபஸிங்:—ஐயா சுபேதார், நாம் பார்க்கச் சொன்னதாகப் போய் ராணு அவர்களைப்பாரும், அவர் முத்திரை போட்ட இந்த 'ஸன்னத்' பத்திரத்தைக் காண்பித்து நம்முடைய ஸைந்நியங்களுக்கு அவர் ராஜ்யத்தின் வழியாய் யுத்த வேஷத்துடன் பிரயாணம் செய்ய அனுமதி கேட்பதாகத் தெரிவியும். நாம் கூடாரமடிக்கப்போகிற இடமும் உமக்குத்தெரியுமே: ராணு அவர்கள் நம்மை நேரில் கண்டுபேசவேண்டுமென்று அபிப்பிராயப்படும் பக்ஷத்தில் அதை உடனே நம்மிடத்தில் வந்து தெரிவியும். பிறகு நாமே அவரைக்கண்டு பேசிக்கொள்வோம். இவ்விஷயத்தை அவரிடத்திலும் சொல்லும்.

சேனைத்தலைவன்:—அப்படியே செய்கிறேன் மகாராஜ்!

பிரதாபஸிங்:—நல்லது, போய்வாரும். (பிரதாபஸிங்கும் யுத்தவீரர்களும் போய்விடுகிறார்கள்).

(ஹேமசந்திரஸிங், உக்கிர ருத்திரப்பிரதாபன் கடோர்க்கஜசேனன் எல்லோரும் வருகிறார்கள்).

ஹேமசந்:—உங்களைத்தானையா, இந்த ஸைந்நியங்கள் யாருடையதையா?

சேனைத்தலைவன்:—ஐயா, இவைகள் ஜோதிபுரி ஸைந்நியங்கள்.

ஹேமசந்:—எவ்விடத்திற்கு என்ன வேலையாய்ப் போகிறார்களையா?

சேனைத்தலைவன்:—ஆஜ்மீர் நாட்டின்மேல் படையெடுத்துப் போகிறோம்.

ஹேமசந்:—சேனாதிபதி யாரையா?

சேனைத்தலைவன்:—காலஞ்சென்ற பிரதாபவர்மா அவர்களுடைய புத்திரனாகிய பிரதாபஸிங் அவர்கள், ஜோதிபுரிக்கு யுவராஜர்.

ஹேமசந்:—ஆஜ்மீர் நாட்டின் பேரிலேயே படையெடுக்கிறீர்களா அல்லது உங்களுக்கும் அவர்களுக்கும் மத்தியிலிருக்கும் எல்லைப்பிரதேசத்தின்பேரிலா.

சேனைத்தலைவன்:—உங்களிடத்தில் உண்மையாய்ச் சொல்லுகிறேன். நாங்கள் அரைக்கால் காணி பொட்டைக் கரம்பு நிலத்துக்காக இவ்வளவு பிரயாசைப்பட்டுச் சேனைகளைக் கூட்டிக்கொண்டு போகிறோம். நிலம் என்கிற பெயர் தவிர அதில் யாதொரு லாபமுமில்லை. அதைவிற்றால் 5-ரூபா கொடுக்கமாட்டான் யாரும். மாதம் 500-ரூ கொடுத்தாலும் நான் அதை உழுது பயிரிடமாட்டேன்.

ஹேமசந்:—அப்படியானால் ஆஜ்மீர் நாட்டரசன் அதைப்பற்றி கவனிக்கமாட்டான். உங்களையாரும் தடுத்து எதிர்க்க மாட்டார்கள்.

சேனைத்தலைவன்:—அப்படியா நினைக்கிறீர்கள்! இதற்குள்ளாகத் தான் ஆஜ்மீர் சைந்நியங்கள் அங்கே மதிலெழுப்பி ஒரு சிறு கோட்டையும் கட்டிவிட்டார்களே.

ஹேமசந்:—சே! இரண்டாயிரம் சேனைகளும் இருபதினாயிரம் ரூபாய்களும் இந்த அற்ப விஷயத்திற்கா செலவழிக்கிறது! தேக[illegible]த்தில் [illegible]ல ஜீர்ண சக்தியும் முழுமுட்டாள்தனமு[illegible]ம் கூடிச் செய்கிற வேலை இது! பணம் அதிகமாயிருந்தால் சும்மா இருக்கவிடாது! சுண்டைக்காய் கால் பணம் சுமை கூலி முக்கால் பணமா? காசைக்கரியாக்காமல் சீனிவெடி வாங்கி சுடச்சொன்னால், அது தான் என்னத்திற்கு; வெறும் வெடி மருந்தை மட்டும் [illegible]ரு[illegible]த்தினால் போதாதா என்பது போலிருக்கிறது. உங்களுக்கு மனப்பூர்வமாய் வந்தனமளிக்கிறேனையா.

சேனைத்தலைவன்:—அநேக சலாம்! போய்வருகிறேனையா. (போய்விடுகிறான்.)

உக்கிர:—நாமும் போவோமா சுவாமி?

ஹேமசந்:—நீங்கள் போய்க்கொண்டேயிருங்கள். இதோ வந்துவிட்டேன்.

(ஹேமசந்திரனைத் தவிர எல்லோரும் போய்விடுகிறார்கள்.)

உலகத்தில் எல்லோரும் ஏதாவது வேலை செய்து கொண்டே தானிருக்கிறார்கள். எதற்காகச் செய்கிறார்கள் என்னடா செய்கிறார்கள் என்று கேட்டால், அப்படியெல்லாம் கேட்டால் சாத்தியப்படுமா என்கிறார்கள். ஆனால் எனக்கு மட்டும் இக்கேள்விகளுக்குப் பதில் தெரிந்து கொள்ளாமல் காரியம் மேலே ஓடுகிறதில்லை. நாய்க்கு வேலையுமில்லை நிற்க நேரமுமில்லை என்று எப்பொழுதும் அங்கு மிங்கும் ஓடுவதில் என்னலாபம்? மனுஷ்யனாய்ப்பிறந்தவனுக்கு உண்டுடுத்துத் தாங்கிப்பருத்து வளர்ந்தால் போதுமா? விசேஷமாய் இதற்குமேல் ஒருவரும் தேடக் காணோம். இதிலேயே தான் ஆயுசுமுழுவதும் சென்று விடுகிறது. ஆனால் யோசித்துப்பார்த்தால் இதெல்லாம் தேகத்தில் குடியிருக்கிற நிர்ப்பந்தத்தினால். தேடுகிற விஷயங்கள் நிர்ப்பந்தத்தினாலல்லாமல் யாதொரு லாபத்தையும் உத்தேசிக்காமல் சுவயேச்சையாய் மனுஷ்யன் தேடுகிற வஸ்து அழகொன்றுதான். பசியில்லாவிட்டால் உப்புப் புளியை யார் தேடுவார்கள்? அல்லது ரோஜா புஷ்பத்தை என்ன லாபத்துக்காகத் தேடுகிறார்கள்? அழகான படங்களை எதற்காக வாங்குகிறார்கள்? ஆனால் வயிற்றுப்பிழைப்புக்காகப் படங்களாவது புஷ்பங்களாவது விலைக்கு விற்கிறவனுக்கு அவைகளின் அழகைக் கவனிக்க நேரமிருக்கிறதில்லை. செம்படவனுக்கு சமுத்திரத்தைப் பார்த்தால் இனி ஜன்ம ஜன்மத்துக்கும் இதில் மீன் பிடித்துப் பிழைக்கலாமென்பதைத் தவிர வேறு எண்ணம் உதிக்கிறதில்லை. ஆனால் நிர்ப்பந்தத்தினால் தேடுகிற வஸ்துக்களில் அழகில்லையா என்றால் அழகு எங்கும் தானிருக்கிறது. அதை அன்புடன் தேடிப்பார்க்கிற கண்கள் தானரிதாயிருக்கிறது. ஆதலால் இனி நாம் நிர்ப்பந்தத்தினால் செய்கிற வேலையிலும் அதனழகைக் கண்டுபிடித்து அதையே கவனித்துக்கொண்டு அதன் நிர்ப்பந்தத்தை மறந்து விடவேண்டும். இந்த மனுஷ்ய தேகம் நிர்ப்பந்தந்தான். ஆனால் அது எவ்வளவு அழகாயிருக்கிறது பார். அப்படியிருக்க அதன் நிர்ப்பந்தத்தையே கவனிப்பானேன்? நாம் பாராட்டினால் தானே நிர்ப்பந்தம்! நாம் அதை அலக்ஷியம் செய்தால் நிர்ப்பந்தம் நம்மை என்ன பண்ணும்? இப்பொழுது தான் இந்த ஜன்ம மெடுத்து விட்டேன் [illegible] சொல்லவேண்டியது [illegible] ருக்கிறது. அந்தக் கட

மையை எப்படிச்செய்கிறது என்பது தான் [illegible]
யோசனையாயிருக்கிறது. திருட்டுத் [illegible]
ந்திருந்து சொல்வதில் பயனில்லை. [illegible]
அவனுக்கும் நமக்கும் என்ன வித்தியாசம்? அப்
செய்தல் சரியல்லவென்று புலஸ்தியவர்மா வி
தில் கடவுளே நமக்கு எச்சரிக்கை கொடுத்திரு
றார். ஆதலால் இவனை நம்மனச்சாக்ஷிக்கு வி
மில்லாமல் கொல்லுகிறதற்கு ஒரு வழி தேட
ண்டும்.

சே! இதெல்லாம் என்னயோசனை! இதோ
தப் பிரதாபஸிங்கும் இரண்டாயிரம் சேனைக
போகிறார்களே! இவர்கள் இப்படியெல்லாம் ே
த்துக்கொண்டா போகிறார்கள்? மூச்சை விடு
ற்கு முதற்கொண்டு இப்படியெல்லாம் யோசி
அப்புறம் மூக்கைப் பிடித்துக்கொண்டு [illegible]
பிடுங்கிக்கொள்ள வேண்டியது தான். நாம்
ஒருக்கால் ஆண்பிள்ளை வேஷம்போட்ட [illegible]
ண்ணோ? இப்படியெல்லாம் தீர்க்கயோசனை
செய்வதாகப் பாசாங்கு செய்துகொண்டு [illegible]
காளித்தனத்தை மறைக்கிறேனோ? [illegible]
நான் ஒன்றையும் மறைக்கவில்லை. அப்படி
னிருக்கட்டுமே! நான் பயங்காளிதான்.
பெண் தான். பயங்காளிக் கைம்பெண்ணுமி
வன் தான் என்னுடைய ஸ்திதியிலிருந்தால் எ
செய்யவேண்டியது? அவனுக்குத் தானென்ன
அதையாவது சொல்லேன்? மனது சுத்தமா
தாலல்லவோ இந்தக்கேள்விகளுக்கெல்லாம்
பிறக்கும்! ஏ மனமே, உனக்கும் எனக்கும் இ
டுவிட்டது. இனி நீ யாரோ நான யாரோ!
னேடுமாறுடி எனக்குத் தலைவலி எடுத்துவி
இனி நீ உன்பாட்டுக்குத் துள்ளிக்கொண்டு
நான் உன்னைக்கவனிக்கப் போகிறதில்லை.
யம், சத்தியம். இதென்ன வெட்கக்கேடு! இ
நாளாய்ப் பாடுபட்டு இன்னும் மனமடங்க
என்றால் கழுதை கூட சிரிக்க ஆரம்பித்து
வானத்தைப் பார்க்கவேண்டி மலைமேலேறின
யாயிருக்கிறது நான் பண்ணுகிற ஆர்ப்பாட
வாம், என்னை எந்த அக்கினியில் வேண்டுமா
போட்டு சுடு, எந்த நரகத்தில் வேண்டுமா
தள்ளு; என் மனது மட்டும் எப்பொழுதும்
ஙங்கமாயிருக்க உன் கிருபை இருந்தால் போ
இனி எனக்கு ஒரு வழி ஏற்படுகிற வரையில்
ராஜ்யத்தில் அடிவைக்கிறதில்லை! (போ
றான.)

## NOTICE TO SUBSCRIBERS.

The Numbers from January to March have been omitted as i[t was] impossible for the Journal to be carried on as usual, in the absence [of the] Editor, who was engaged otherwise in closely watching the Arbi[tration and] insolvency cases.—*Secy. D. K. Agency.*